

# உங்கள் குழந்தைகளின் இருமலைப் பற்றி கவலைப்படாதீர்கள்!

வயது முதிர்ந்தவர்களுக்கு கொடுக்கும் மருந்துகள் எல்லாமே குழந்தைகளுக்கும் ஏற்றதல்ல. குழந்தைகள் மிருதுவான சரீரக் கட்டு வாய்ந்தவர்கள். ஆகையினால் குழந்தைகளுக்கென்று பிரத்தியேகமான பெக்டோலின் தயாரிக்கப்படுகிறது.

குழந்தைகளுக்கான பெக்டோலின் காரமில்லாதது. சுவையுள்ளது. ஆனால் சீக்கிரம் குணமளிக்கும். அது இருமலை மூலஸ்தானத்திலேயே தாக்கி சுவாசப் பைகளையும் பாதுகாக்கிறது.



குழந்தைகளின் பெக்டோலின் பாட்டில் மேல் நீல லேபில் ஒட்டியிருக்கும். பார்த்து வாங்குங்கள்.

கக்குவான், இன்புளூயன்சா, ப்ராங்கிடிஸ் முதலிய வியாதிகளுக்கு பெக்டோலின் ஏற்ற மருந்து.

**ஸின்டெடிக் (இந்தியா) லிட்.**



4 & 16 அவு. பாட்டில்கள்.

பம்பாய் 7. போன் 42850

லண்டன் ஆபீஸ்: 128;129 சீப் சைடு, லண்டன், E. C. 2

சென்னை மாகாணத்துக்கு சோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:
ஓரியண்டல் மர்க்கன்டைல் ஏஜன்ஸி 99, அரமனைக்காரத் தெரு, மதராஸ்.

S—PRT.

# கல்கி
## பொருளடக்கம்

மலர் 6 இதழ் 25 | 1947 ஜனவரி 19 | வியஹு தை 6



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.

# சங்கீத மகாபுருஷர் *தியாகய்யரின்*



# நூற்றாண்டு விழாக் கொண்டாட்டம்!



தமிழ் நாட்டுப் பிரபல சங்கீத வித்வான்களின் அரிய கைங்கரியம்!

## நூற்றாண்டு விழாவுக்கெனவே வெளியிடப்பட்டுள்ள சில அற்புதமான இசைத்தட்டுகள்!



மஹாராஜபுரம்
விஸ்வநாத ஐயர்
H. 15813 { மோஹனராமா
2-பாகங்கள் (மோஹனம்) }



மதுரகீதவாணி ஸ்ரீமதி
என். வி. வஸந்தகோகிலம்
H 15816 – { நீதயராதா (வஸந்த பைரவி)
ஏலாவதாரமு (முகாரி) }
H. 15817 { கத்தனுவாரிகி
2-பாகங்கள் (தோடி) }



ஜி. என். பாலசுப்ரமணியம்
பிடில் : கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை
மிருதங்கம் : பாலக்காடு மணி ஐயர்
HT. 123 { வாசுதேவயனி
2-பாகங்கள் (கல்யாணி) }



சாத்தூர்
ஏ. ஜி. சுப்ரமணியம்
H 15815 { ராமாநின்னு
2-பாகங்கள் (மோஹனம்) }




எல்லா அத்தாக்ஷி பெற்ற வியாபாரிகளிடமும் கிடைக்கும்

**"ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"**

தி கிராமபோன் கம்பெனி லிமிடெட்
டம்டம், பம்பாய், மதராஸ், டில்லி, லாகூர்




மலர் 6 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 24

# என்ன சேதி?

## பொங்கல் பொங்கிற்று!

இந்த வருஷம் தைப் பொங்கலன்று வெறும் பால் மாத்திரம் பொங்கவில்லை; தமிழ் மக்களின் அளவுகடந்த உற்சாகமும் தமிழபிமானமும் பொங்கித் ததும்பிப் பிரவாகமாக ஓடின என்றே சொல்ல வேண்டும். தமிழ் நாட்டின் மூலை முடுக்குகளிலுள்ள எல்லாக் கிராமங்களும் பட்டணங்களும் தைப் பொங்கலைத் தலை சிறந்த தமிழ்த் திருநாளாகக் கொண்டாடியிருக்கிறார்கள். அன்றைய தினம் தமிழ் நாட்டின் மகிமையும் தமிழ் மக்களின் பெருமையும் தமிழ் மொழியின் சிறப்பும் பல்லாயிரக் கணக்கான மேடைகளிலே ஒலித்திருக்கும்.

மங்களகரமான இந்தப் பொங்கல் திருநாளன்று தமிழ் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் ஆயிரக்கணக்கான அன்பர்கள் நமக்குப் பொங்கல் வாழ்த்துக்கள் அனுப்பியிருக்கிறார்கள். அவற்றில் பல கவிதைகளாகப் பொங்கியிருக்கின்றன; இன்னும் பல வசன கவிதையாகப் பரிணமித்திருக்கின்றன. நேயர்கள் அனைவருக்கும் நம்முடைய நன்றியையும் பதில் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## வீராசாமி ராஜீநாமா

சென்னை சர்க்காரின் பதின்மூன்று மந்திரிகளிலே கடைசி மந்திரியாக வந்த ஸ்ரீ வீராசாமி அவர்கள் முதன் முதலாக ராஜீநாமா செய்திருக்கிறார்! அவருக்கும் அவர் வகித்துவந்த மீன் இலாகா காட்டு இலாகாவுக்கும் நம்முடைய அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

ஸ்ரீ வீராசாமி தம்முடைய தேக அசௌக்கியத்தின் காரணமாகவே பதவியை ராஜீநாமாச் செய்ததாகச் சொல்லுகிறார். அவருடைய ராஜீநாமாவுக்குக் காரணம் எதுவாயிருந்த போதிலும் அவரை வாழ்த்திப் பாராட்டுவது நமது கடமையாகும். சென்னை மந்திரி சபையின் அபத்தமான காரியங்களினால் நாளுக்கு நாள் பெருகிவரும் அபகீர்த்திகளிலிருந்து ஸ்ரீ வீராசாமி இப்போது பரிபூரண விடுதலையடைந்து விட்டார். இதனால் ஏற்பட்ட உற்சாகத்தினாலேயே அவர் கூடிய சீக்கிரம் தேக சௌக்யம் அடைந்தாரானால், அதில் ஆச்சரியம் ஒன்றும் இராது.

## தாமதம் கூடாது

சென்ற ஒரு மாத காலத்திற்குள்ளாக அநேக பிரசித்தி பெற்ற ஆலயங்களைத் தமிழ் மக்கள் ஹரிஜனங்களுக்குத் திறந்து விட்டிருக்கிறார்கள். இன்னும் பல கோவில்கள் திறக்கப்படுகின்றன என்றும், திறக்கப்படுமென்றும் தினந்தோறும் செய்திகள் வந்து கொண்டிருக்கின்றன. மொத்தத்தில் தமிழ் நாடெங்கும் ஹரிஜன ஆலயப் பிரவேசத்துக்குப் பூரண ஆதரவும் சாதகமான அபிப்பிராயமும் இருந்து வருகிறது என்பது சந்தேகமறத் தெளிவாக விளங்கியிருக்கிறது. எல்லோருக்கும் நன்றாக விளங்கினாலும் சென்னை சர்க்காருக்கு மாத்திரம் இந்த விஷயம் விளங்கியதாகத் தெரியவில்லை. அவர்களுக்கு விளங்கியிருந்தால், ஒவ்வொரு கோவிலையும் திறப்பதற்கு அந்தந்த ஊரிலுள்ள ஜனங்களின் அபிப்பிராயத்தைக் கேட்பது என்னும் சம்பிரதாயத்தை இனியும் கடைப்பிடித்துக் காலங் கடத்த மாட்டார்கள் அல்லவா? இனிமேல் ஜனங்களுடைய அபிப்பிராயத்தைச் சர்க்கார் கேட்கவேண்டிய அவசியமே இல்லை. சர்க்காருடைய அபிப்பிராயத்தைத்தான் ஜனங்கள் கேட்கவேண்டிய அவசியம் நேர்ந்திருக்கிறது. தமிழ் நாட்டுப் பொது மக்களின் அபிப்பிராயம் நன்றாக வெளியாகிவிட்டபடியால், சென்னை சர்க்கார் உடனே தமிழ்நாட்டிலுள்ள எல்லாக் கோவில்களை

யும் ஹரிஜனங்களுக்குத் திறக்கும்படியாக உத்தரவு பிறப்பிப்பது நியாயமும் முறைமையுமாகும். இல்லாவிடில் நமது மந்திரிகள் சுற்றுப் பிரயாணம் செய்வதற்கும், ஆலயத் திறப்பு என்ற பெயரால் ஒவ்வொரு ஊருக்கும் போய் மாலை போட்டுக் கொள்வதற்குத்தான் இம்மாதிரி காலந் தாழ்த்துகிறார்கள் என்று ஏற்படும். புதுச்சேரியிலும் காரைக்காலிலும் உள்ள கோவில்களையெல்லாம் திறந்து விடும்படி பிரஞ்சு சர்க்கார் போட்டிருக்கும் உத்தரவைப் பார்த்த பிறகாவது நமது மந்திரிகள் விழித்து எழுவார்களாக.

## சொந்த விவகாரமா?

இந்தோ-சைனா தேசத்துக் குடி மக்களின் நிலைக்கு இரங்குகிறோம். நாட்டின் சுதந்திரத்துக்காக இரத்தத்தைச் சிந்தி அவர்கள் நடத்தும் போராட்டத்துக்கு நமது அநுதாபத்தைச் செலுத்துகிறோம்.

மகா யுத்தம் முடிந்து ஜப்பானிய ஆதிக்யத்திலிருந்து விடுதலையடைந்த இந்தோ-சைனாவை, 'பழைய பெத்தானே பெத்தான்' என்று பிரெஞ்சுக்காரர்கள் முன் போலவே அடிமைப்படுத்தி ஆளப் பார்க்கிறார்கள். அந்த முயற்சியை எதிர்த்து இந்தோ — சைனாவின் ஒரு பகுதியில் ஸ்தாபிதமாயிருக்கும் 'வியட்-நாம்' குடியரசு சர்க்கார் தீரப் போர் நடத்தி வருகிறார்கள். பிரெஞ்சு காலனி மந்திரியாகிய மௌனட்டே இந்தோ - சைனாவுக்குப் புறப்பட்டு வந்த போது, ஒரு சமாதான ஒப்பந்தம் ஏற்படுமென்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் அவ்விதம் சமாதான ஒப்பந்தம் ஏற்படவில்லை. யுத்தமே அதிகமாக மூண்டிருக்கிறது.

"வியட்நாம் விவகாரம் எங்கள் சொந்த விவகாரம். இதில் அந்நியர்கள் பிரவேசிப்பதற்கு உரிமை இல்லை" என்று மௌனட்டே சொல்லுகிறார். நல்லது, அந்நியர்கள் யாரும் பிரவேசிக்கவில்லை. ஆனால், பிரெஞ்சுக்காரர்கள் இந்தோ-சைனாவில் பிரவேசிப்பதற்கு என்ன உரிமை இருக்கிறது? இந்தோ-சைனாவுக்குப் பிரெஞ்சுக்காரர்கள் அந்நியர்கள் அல்லவா?

பிரான்ஸ் தேசத்திலே பிரெஞ்சுக்காரர்கள் எது வேண்டுமானாலும் செய்யலாம். அதைச் 'சொந்த விவகாரம்' என்றும் சொல்லலாம். ஆனால் பிரான்ஸுக்கு ஏழாயிரம் மைல் தூரத்திற்கப்பாலுள்ள இந்தோ-சைனாவில் சுதேச மக்களின் சுதந்திரத்தைப் பிடுங்குவதற்காகப் பிரான்ஸ் நடத்தும் அக்கிரமப் போராட்டத்தைச் சொந்த விவகாரம் என்று எப்படிச் சொல்வது? 'சொந்த அக்கிரமம்' என்றுதான் சொல்ல வேண்டும்.

## தமிழர் எங்கே?

புது டில்லி தமிழ்ச் சங்கத்தின் காரியதரிசி மீரத் காங்கிரஸுக்குப் போயிருந்தார். அங்கே தமிழ்நாட்டுப் பிரதிநிதிகளைப் பார்க்கவேண்டுமென்று தேடி அலைந்தார். தமிழ்நாட்டுப் பிரதிநிதிகள் இருந்த இடத்தையே அவரால் கண்டுபிடிக்க முடியவில்லை. "முன்னேயெல்லாம், ஸ்ரீ சத்தியமூர்த்தி காங்கிரஸுக்கு வந்துகொண்டிருந்த காலத்தில், இப்படியா இருந்தது? தமிழ்நாட்டுப் பிரதிநிதிகள் உள்ள இடம் உடனே தெரியுமே? இப்போது தேடினாலும் அகப்படவில்லையே?" என்று மேற்படி காரியதரிசி நமக்குக் கடிதம் எழுதியிருந்தார்.

ஆம்; அந்தக் காலம் நமக்குக்கூட ஞாபகம் இருக்கிறது. காங்கிரஸ் பிரதிநிதிகளுக்காக அமைக்கப்படும் விடுதிகளில் தமிழ்நாட்டுப் பகுதி கலகலவென்று இருக்கும். காலை நேரத்தில், மற்ற மாகாணப் பகுதிகளில் எழும்பும் தேசிய கீதங்களை அமுக்கிக் கொண்டு, பாரதியாரின் பாடல்கள் கம்பீரமாக முழங்கும். இனிய தமிழ்ப் பேச்சு எங்கே போனாலும் காதில் விழும். தமிழ்ப் பிரதிநிதிகளுக்காகவே நமது திருவல்லிக்கேணி அப்பாசாமி ஐயர் காங்கிரஸுக்குச் சென்று ஹோட்டலும் நடத்துவார். பாரதி கீதங்களோடு கலந்து 'கம்' என்ற காப்பி மணமும் வரும்.

இப்போது நிலைமை மாறியே விட்டது. காங்கிரஸ் பிரதிநிதிகளாவதற்குப் போட்டி என்னமோ பலமாக நடக்கிறது. எல்லாம் இவ்விடத்தில் கிடைக்கக் கூடிய அற்ப அதிகாரங்களை முன்னிட்டுத்தான் என்று தெரிகிறது. இது சம்பந்தமாக ஒரு நேயர் எழுதியிருக்கும் கடிதத்தை 'வட்டமேஜை'யில் வெளியிட்டிருக்கிறோம். அவருடைய புகார் நியாயமானது என்பதில் சந்தேகம் இல்லை. சிலர் விஷயத்தில் காங்கிரஸுக்கும் அ. இ. கா. கமிட்டிக்கும் போகத் தடுக்க முடியாத அசௌகரியம் நேரிட்டிருக்கலாம். ஆனால் 250 பேரில் 190 பேருக்கு அசௌகரியம் என்பது நம்பத்தகுந்ததல்ல. அப்படி அசௌகரியத்தினால் அங்கு போக முடியாதவர்கள் தங்கள் ஸ்தானங்களை ராஜிநாமா செய்து மற்றவர்களுக்காவது இடம் கொடுக்கலாமல்லவா?

சாஸ்தா

சீக்கிரத்தில் மாஸ்கோவில் மூன்று வல்லரசுகளின் மகாநாடு நடைபெறப் போகிறது. சமீபகாலத்தில் தோழர் ஸ்டாலினுடைய தேக அசௌக்கியத்தைப் பற்றி உலவிய வதந்திகள் மேற்படி மகா நாட்டில் முதல் பிரச்னையாக விவாதித்து முடிவு செய்யப் படலாம்.

தோழர்காள்! வாருங்கள்!

பெவின் (பிரிட்டன்)



## ஸர் சி.பி. மகாத்மியம்

"சுதேச மன்னர்களையெல்லாம் ரக்ஷிக்க இந்தக் கலியுகத்தில் நான் அவதரித்திருக்கிறேன். அவர்களை யார் தொட முடியும், பார்க்கலாம்!" என்று திவான் ஸர் சி.பி. கர்ஜிக்கிறார்.

"இது என்ன கூத்து?" என்று தேசியத் தலைவர்கள் வியப்புடன் பார்க்கிறார்கள்.



"சுதேச சமஸ்தானங்களைப் பாதுகாக்கும் விஷயத்தில் திருவாங்கூரில் நான் அனுசரித்த கொள்கையை இந்திய தேசிய சர்க்கார் இப்போது பின்பற்றுவது பற்றிச் சந்தோஷம்" என்று ஸர் சி.பி. சொல்லுகிறார்.




மாணவர் காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ ரவீந்திர வர்மா திருவாங்கூரிலிருந்து வெளியேற்றப் பட்டார். மாணவர் கூட்டம் கலைக்கப் பட்டது.



# திருமகளும் கலைமகளும்

இந்தக் கலிகாலத்தில் என்னவெல்லாமோ அதிசயங்கள் நடக்கின்றன. வரவர மாமியார்கள் மிகமிக நல்லவர்களாகிக் கொண்டு வருகிறார்கள். மாட்டுப்பெண்களை மாடுகள் என்று எண்ணி நடத்தாமல் வீட்டுப் பெண்களாகவே நடத்துகிறார்கள். புத்தகமும் பத்திரிகையும் வாங்கிக் கொடுத்து நாட்டுப் பெண்களைப் படிக்கச் சொல்லுகிறார்கள்! சங்கீதமும் பரத நாட்டியமும்கூடக் கற்கச் சொல்கிறார்கள்! நாட்டுப் பெண் படித்தாலும் பாடினாலும் குடித்தனம் குட்டிச் சுவராகும் என்று நினைப்பதில்லை. நாட்டுப் பெண்களும் மாமியார்களிடம் அதிக மரியாதை வைக்கிறார்கள்; அன்பாகவும் நடந்து கொள்கிறார்கள்.

மேலே சொன்னவையெல்லாம் திருமகளுக்கும் கலைமகளுக்கும்கூட இந்தக் காலத்தில் பொருத்தமாயிருக்கிறது. மாமியார் லக்ஷ்மியும் மருமகள் சரஸ்வதியும் ஓரிடத்தில் வசிக்கமாட்டார்கள் என்னும் வசனம் பொய்யாகிவிட்டது. லக்ஷ்மி இருக்குமிடத்தில்தான் சரஸ்வதி, சரஸ்வதி இருக்குமிடத்தில்தான் லக்ஷ்மி என்று ஏற்பட்டு வருகிறது.

கல்வியிலும் கலைவளத்திலும் சிறந்திருக்கும் தேசந்தான் இந்த நாட்களில் பொருள் வளத்திலும் சிறந்ததாகிறது; அத்தகைய தேசத்துக்கே அகில உலகத்தின் தலைமைப் பதவி போய்ச் சேருகிறது.

கல்வி, கலை என்று நாம் சொல்லும்போது நல்ல முறையில் கற்பிக்கப்படும் கல்வியையும், தக்க முறையில் வளர்க்கப்படும் கலையையுமே குறிப்பிடுகிறோம். நமது இந்தியா தேசத்தில் இதுவரையில் கற்பிக்கப்பட்டு வரும் கல்வி, பெயரளவிலேதான் 'கல்வி' யாகும். உண்மையான கல்வி அல்ல. நமது கலாசாலைகளும் சர்வகலாசாலைகளும் அவற்றின் பெயரிலே மட்டுந்தான் 'கலை'யை வைத்துக் கொண்டிருக்கின்றன. மற்றப்படி கலைகளின் வளர்ச்சிக்கு அவை எந்தவிதமான உதவியும் செய்வதே இல்லை.

தற்போது நடைபெறும் இந்திய தேசிய சர்க்காரில் உள்ள நமது மாபெரும் காங்கிரஸ் தலைவர்களுக்கு இவையெல்லாம் தெரிந்த விஷயங்கள்தான். ஒரு பக்கத்தில் இந்தியா பூரண சுதந்திரமடையும் மார்க்கத்தைத் தேடிக்கொண்டும் பிரிட்டிஷாராலும் முஸ்லிம் லீக்கினாலும் ஏற்படும் முட்டுக் கட்டைகளைச் சமாளித்துக் கொண்டும் இருக்கையில், மற்றொரு பக்கத்தில் அவர்கள் தேசப் புனருத்தாரணத்திலும் கவனம் செலுத்தி வருகிறார்கள். தேசப் புனருத்தாரண முயற்சிகளுக்கெல்லாம் அஸ்திவாரம் தக்க முறையில் கல்வி அளிப்பதே என்பதை உணர்ந்திருக்கிறார்கள்.

*　　*　　*

புது வருஷத்தில் கல்வி-கலை சம்பந்தமான இரண்டு முக்கிய நிகழ்ச்சிகள் இந்தியாவில் நடைபெற்றிருக்கின்றன. அவற்றில் ஒன்று புது டில்லியில் நடந்த 34-வது இந்திய விஞ்ஞானிகள் மகாநாடாகும்.

இந்தியாவில் வருஷந்தோறும் விஞ்ஞானிகளின் மகாநாடு நடைபெறுகிறது என்பதோ, இதுவரையில் 33 மகாநாடுகள் நடந்திருக்கின்றன என்பதோ பெரும்பாலோருக்குத் தெரிந்தேயிராது. இந்தியாவின் இடைக்கால தேசிய சர்க்கார் ஏற்பட்டு, மேற்படி சர்க்காரின் உபதலைவர் ஜவாஹர்லால்ஜி 34-வது இந்திய விஞ்ஞானிகள் மகாநாட்டைத் திறந்து வைத்த பிறகுதான், மேற்படி விஷயங்கள் பிரபலமாயின.

நமது கலாசாலைகளில் இன்றுவரை போதிக்கப்பட்டு வரும் விஞ்ஞானம் வெறும் ஏட்டுச் சுரைக்காய் விஞ்ஞானமாகவே இருந்து வருகிறது. விஞ்ஞான பாடப் புத்தகங்களைப் பொட்டை நெட்டுருச் செய்து பரீட்சையில் எழுதிப் பாஸ் செய்வதுதான் விஞ்ஞானப் படிப்பின் நோக்கமாகவும் முடிவாகவும் இருந்து வருகின்றன. சொந்தமாக மூளையைச் செலுத்தி ஆராய்ச்சியும் சோதனைகளும் செய்து விஞ்ஞான அறிவை வளர்ப்பதற்கான

வசதிகள் இந்த நாட்டுக் கலாசாலை களில் இல்லை. டாடா முதலிய தனிப் பட்ட பரோபகாரிகளால் விஞ்ஞான வளர்ச்சிக்குச் சொற்ப வசதிகள் ஏற் பட்டிருக்கின்றன. அவற்றிலும் எத் தனையோ நிர்வாக சங்கடங்களை அதிகார வர்க்க சர்க்கார் ஏற்படுத்தி யிருக்கிறார்கள்.

இவ்வளவு பிரதிகூலமான நிலைமை யிலும் நமது பாரத நாட்டுப் புராதன மேதாவிகளின் வம்சத்திலே பிறந்த வர்களில் சிலர், ஸர் சி. வி. ராமன், ஸர் பி. சி. ராய் முதலியவர்கள், தங்கள் சூழ் நிலையை மீறி அரும் பெரும் ஆராய்ச்சிகளைச் செய்து இந்தியாவுக்குப் புகழைத் தந்தார்கள். வெளி தேசத்து விஞ்ஞானிகள் இந்தியாவைத் தேடி வரும் நிலைமையையும் உண்டு பண்ணினார்கள்.

அதற்குப் பிறகாவது, அதிகார வர்க்க சர்க்கார் இந்திய விஞ்ஞான வளர்ச்சிக்கு வசதிகள் அளிக்கவோ, இந்திய விஞ்ஞானிகளின் ஆராய்ச்சியைத் தேச முன்னேற்றத்துக்குப் பயன்படுத்திக் கொள்ளவோ முன் வந்தார்களா என்றால், அதுதான் இடையாது. பிரபலமடைந்த விஞ்ஞானிகளின் தலையில் 'ஸர்' பட்டத்தையும், நெற்றியில் 'அசட்டு'ப் பட்டத்தையும் சேர்ந்துக் கட்டி விட்டுப் பழைய வழியிலேயே போய்க் கொண்டிருந்தார்கள்!

மேற்படி நிலைமை கூடிய சீக்கிரம் மாறலாம் என்ற நம்பிக்கை நமக்கு இப்போது ஏற்படுகிறது. இந்திய விஞ்ஞானிகளின் மகா நாட்டைத் திறந்து வைத்தபோது பண்டித ஜவாஹர்லால் நேரு செய்த பிரசங்கம் அத்தகைய நம்பிக்கையை நமக்கு உண்டுபண்ணுகிறது. "இந்தியாவின் முன்னேற்றம் இந்திய விஞ்ஞானிகளாகிய உங்கள் கையிலேதான் இருக்கிறது!" என்று கூறி நமது விஞ்ஞானிகளை உற்சாகப்படுத்திய ஜவாஹர்லால்ஜி, "விஞ்ஞான வளர்ச்சிக்கு அவசியமான எல்லா உதவிகளையும் செய்யத் தயாராயிருக்கிறோம்!" என்று தேசிய சர்க்காரின் சார்பாக வாக்களித்திருக்கிறார்.

மேற்படி இந்திய விஞ்ஞான மகா நாட்டுக்கு பிரிட்டனிலிருந்தும் அமெரிக்காவிலிருந்தும் ருஷியாவிலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். அவர்களில் ருஷியப் பிரதிநிதிகளை வரவேற்று ஜவாஹர்லால்ஜி பேசிய விஷயம் மிகவும் முக்கியமானது. "உங்களுடைய தேசம் ஒரு சில வருஷங்களில் மகத்தான முன்னேற்றம் அடைந்திருப்பதற்குக் காரணம் விஞ்ஞானிகளாகிய உங்களுடைய முயற்சிகள்தான். ருஷியாவில் நீங்கள் கடைப்பிடித்த வழிகளை உங்களிடம் தெரிந்துகொண்டு நாங்களும் அதே வழிகளில் முன்வேற விரும்புகிறோம்" என்று சொன்னார். அக்ஷரலக்ஷம் பெறும்படியான வார்த்தைகள். நடை உடை பாவனை, நாகரிகம், பண்பாடு, சிற்பம் சங்கீதம் கவிதை முதலிய இன்பக்கலைகள், — இவற்றிலேயெல்லாம் 'சுதேசியம்' அவசியம். ஆனால் விஞ்ஞான ஆராய்ச்சி விஷயத்தில் சுதேசிக் கொள்கை அபத்தமானது. உலகத்தில் எந்த மூலையில் ஒரு விஞ்ஞான உண்மை கண்டு பிடிக்கப் பட்டாலும் அது உலகத்துக்கே பொதுவானது. ரயிலும் மோட்டாரும், தந்தியும், டெலிபோனும், ரேடியோவும், ரோட்டரியும், டிராக்டரும் எந்த தேசத்தில் கண்டுபிடிக்கப் பட்டதானாலும் நாமும் எடுத்துக் கொள்ள வேண்டியதுதான். ஏற்கெனவே கண்டு பிடிக்கப்பட்ட விஞ்ஞான உண்மைகளையும் இயந்திர சாதனங்களையும் மறுபடியும் அடியிலிருந்து நாம் கண்டு பிடிக்க வேண்டும் என்பது சுத்த அசட்டுத்தனம்.

* * *

ஜவாஹர்லால்ஜி விஞ்ஞான மகா நாட்டில் வெளியிட்ட கருத்துக்கள் எல்லாம் மிகச் சிறந்தவை. ஆனால் அவை காரியத்தில் நிறைவேற வேண்டுமானால், நமது நாட்டில் இப்போது அமுலில் உள்ள கல்வி முறையை அடியோடு மாற்றி அமைப்பது அவசியமாகும். கல்வி முறை மாறினால்தான் விஞ்ஞானம் வளரும். விஞ்ஞானம் வளர்ந்தால்தான் தேசத்தில் தொழில்கள் செழித்தோங்கும். மேற்படி விஷயத்தைப் பம்பாயில் சென்ற வாரத்தில் கூடிய அகில இந்தியக் கல்வி மகாநாட்டில் ராஜாஜி தெளிவாக வெளியிட்டார்.

"தேசத்தில் தொழில்கள் செழித்துப் பொருள் உற்பத்தி பெருக வேண்டியது தற்போது மிகவும் அவசியம். ஆனால் எல்லாத் தொழில்களுக்கும் அடிப்படையான தொழில், கல்விதான். கல்வித் தொழில் சரிவர நடந்தால் மட்டுமே மற்ற எல்லாத் தொழில்களும் அபிவிருத்தியடையும்" என்று ராஜாஜி கூறினார்.

கல்வித் தொழில் சரியாக நடக்க வேண்டுமென்றால், தற்போதுள்ள கல்வி முறையும் பாட திட்டமும் அடியோடு மாற்றி அமைக்கப்பட வேண்டும்.

தற்சமயம் நமது நாட்டுக் கலாசாலைகளிலும் பள்ளிக்கூடங்களிலும் அளிக்கப்படும் கல்வி பெரும்பாலும் ஏட்டுச் சுரைக்காய் வகையைச் சேர்ந்தது. பிற்கால வாழ்க்கையில் சிறிதும் பயன்பட முடியாத உபயோக மற்ற குப்பை கூளங்கள் நமது சின்னஞ் சிறு குழந்தைகளின் மூளையிலும், இளம் பிராய வாலிபர்களின் மூளையிலும் திணிக்கப் படுகின்றன. இதனால் 100-க்கு 99 குழந்தைகளின் மூளைகள் வற்றி வறண்டு போகின்றன. சுயமாக ஆராய்ச்சி செய்யும் சக்தியையும், கற்பனு சக்தியையும் இழந்து விடுகிறார்கள். சர்க்கார் காரியாலயங்களிலும் வர்த்தகக் கம்பெனிகளிலும் குமாஸ்தா வேலை செய்வதற்கே லாயக்காக வெளி வருகிறார்கள்.

நமது கல்வி முறையில் 'கர்ரிகுலம்' என்னும் பாட திட்டம் எவ்வளவு மோசமாயிருக்கிறதென்பதைப் பற்றி முன்னமே ''கல்கி''யில் ஒரு விரிவான கட்டுரை வெளியாகி யிருக்கிறது. இலக்கண பாடத்திலிருந்தும் பூகோளத்திலிருந்தும் அதில் உதாரணங்கள் எடுத்துக் காட்டியிருந்தது. கணக்குப் பாடத்திலிருந்து சில உதாரணங்களை இங்கே எடுத்துக் காட்டுகிறோம் :—

''ஒரு வியாபாரி மூட்டை ரூ. A அடக்கமுள்ள ஒருவகை அரிசியையும் ரூ. B அடக்கமுள்ள மற்றொருவகை அரிசியையும் X: Y ரீதியில் கலந்து அதை மூட்டை ரூ. C வீதம் விற்றால், அவனுடைய லாபம் என்ன? G சதவீத லாப மடைந்தால் A. B. X. Y. G களுக்குள் சம்பந்தம் என்ன ?''

பதின் மூன்று அல்லது பதினாறு வயதுக் குழந்தைகள் படிக்கும் நாலாவது பார கணக்குப் புத்தகத்தில் மேலே குறிப்பிட்ட கணக்கு இருக்கிறது. ஒரு தடவை படித்துவிட்டு உடனே கண்ணை மூடிக்கொண்டு ''படித்தது என்ன ?'' என்று யோசித்துப் பாருங்கள். மனதில் A. B. X. Y என்னும் குழப்பத்தைத் தவிர வேறு ஏதாவது பதிந்திருக்கிறதா ?

அதே புத்தகத்திலிருந்து இன்னும் ஒரு அற்புதமான கணக்கு :—

''X கஜ தூரமுள்ள ஒரு வட்டமான பாதையில் ஒரே இடத்திலிருந்து சேர்ந்தாற்போல் இருவர் புறப்பட்டு எதிர்த் திசையில் நிமிஷத்திற்கு A கஜ வீதமும் B கஜ வீதமும் சவாரி செய்கிறார்கள். அவர்கள் எங்கு, எப்பொழுது சந்திப்பார்கள் ?''

இந்தக் கணக்கைப் படித்ததும், ''கூடிய சீக்கிரத்தில் அவர்கள் யமலோகத்திலோ, பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலோதான் சந்திப்பார்கள் !'' என்று பதில் சொல்லத் தோன்றுகிறதா, இல்லையா ?

''சின்னங்கள் (Symbol) மூலமாகக் குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பது சரியான முறையல்ல. முதலில் பொருள்களை நேரில் காட்டியும், விஷயங்களை நேர்முகமாய்ச் சொல்லியும் கல்வி போதிப்பதுதான் சரியான போதனு முறை'' என்று ராஜாஜி பம்பாயில் கூறினார்.

மிகச் சிறு குழந்தைகளுக்கு எழுத்துக்களைக் கற்பித்துப் புத்தகம் வாசிக்கச் சொல்வது பற்றியே ராஜாஜி அவ்விதம் சொன்னார். அப்படியானால், மேலே காட்டியிருக்கும் உதாரணங்களில் 'சின்னங்கள்' எவ்வளவு மோசமாக உபயோகிக்கப் பட்டிருக்கின்றன என்று சொல்ல வேண்டியதில்லை.

இப்படியெல்லாம் அபத்தமான பாட திட்டங்களினால் நமது செல்வக் குழந்தைகளின் மூளைகளை வறளச் செய்து விடுவதால்தான், பள்ளிக்கூடங்களிலிருந்தும் கலாசாலைகளிலிருந்தும் வருஷந்தோறும் வெளிவரும் லட்சக்கணக்கான பிள்ளைகளில் மிகப் பெரும்பாலோர் அறிவுத்திறனும் கற்பனு சக்தியும் தேவையாயுள்ள காரியங்கள் எதற்கும் லாயக்கின்றி இயந்திரம்போல் வேலை செய்வதற்கே தகுதியாக வெளி வருகிறார்கள்.

கொஞ்சநஞ்சம் குழந்தைகளின் மூளையில் மீதமுள்ள சாரத்தையும் பரீட்சை என்னும் பீதி வறட்டிவிடுகிறது. இதைப்பற்றி இந்த இதழ் வட்ட மேஜையில் வெளியாகியிருக்கும் கடிதத்தில் நன்றாகச் சொல்லியிருப்பதைக் காணலாம்.

இத்தகைய பயனற்ற படிப்பினாலும் பரீட்சைப் பீதியினாலும் அறிவின் முழு சக்தியை இழந்து வெளி வருகிறவர்கள்தான் ஆசிரியர்களாகிறார்கள். அதிலும், வேறு நல்ல சர்க்கார் உத்தியோகமோ, கம்பெனி உத்தியோகமோ கிடைக்காமல் ஏமாற்ற மடைந்து வாழ்க்கையிலேயே உற்சாக மிழந்தவர்கள்தான், வேண்டா வெறுப்பாக ஆசிரியர் வேலைக்கு வருகிறார்கள். மிகவும் சொற்ப சம்பளமுள்ள ஆசிரியர் வேலையில் அவர்கள் நீடித்து

இருக்க இருக்க, மேலும் மேலும் உற்சாகம் குறைந்துகொண்டு வருகிறது. வாழ்க்கையில் வெறுப்போடு உபாத்தியாயர் தொழிலிலும் வெறுப்பு ஏற்படுகிறது. இதன் பயனெல்லாம் குழந்தைகளின் தலையிலே வந்து விழுகின்றன.

ஆகவேதான், ராஜாஜி "நல்ல முறையில் கல்வி கற்பிக்க வேண்டுமானால் நல்ல ஆசிரியர்கள் வேண்டும். நல்ல ஆசிரியர்களை உண்டாக்குவதற்குத் தகுந்த போதனா முறை ஆசிரியர்கள் வேண்டும். அத்தகைய ஆசிரியர்களுக்கு எங்கே போவது? எப்படித் தயாரிப்பது?" என்ற கவலையை வெளியிட்டார்.

நிலைமை மிகவும் கவலைக்கிடமானதுதான்; சந்தேகமில்லை. ஆயினும் அதைச் சமாளித்தாக வேண்டும். நல்ல ஆசிரியர்கள் அற்ப சொற்பமாகக் கிடைத்தால் போதுமா? "மொத்தம் இருபத்தைந்து லட்சம் ஆசிரியர்கள் தேவை!" என்று மேற்படி மகாநாட்டிலேயே ஸார்ஜெண்ட் திட்டத்தின் மூல புருஷரான ஸர் ஜான் ஸார்ஜெண்ட் வெளியிட்டார்.

ஆசிரியன்மார்களுக்குச் சம்பளம் உயர்த்த வேண்டும் என்ற கிளர்ச்சி நாடெங்கும் நடந்து வருகிறது. அதை நாம் மனப்பூர்வமாக ஆதரிக்கிறோம். எல்லாக் கல்விச் சீர்திருத்தத்துக்கும் அதுவே அடிப்படை என்றும் கருதுகிறோம். ஆனால் ஒரு விஷயம் சொல்ல வேண்டும். ஆசிரியர் சம்பளத்தைப் பிடிவாதமாக உயர்த்தாம லிருந்து நாடெங்குமுள்ள ஆசிரியர்கள் வேலை நிறுத்தம் செய்தார்களானால்,—வேலை நிறுத்தம் ஒரு வருஷம் நீடித்ததானால்,—அதனால் நாட்டுக்கு எவ்வளவோ நன்மை உண்டாகலாம். பழைய குழி விழுந்த பள்ள வழியிலேயே நெடுநாளாகப் பிரயாணம் செய்து கறடு தட்டிப்போன ஆசிரியர்கள் ஒரு வருஷம் கட்டாய விடுமுறை எடுத்துக் கொண்டால், பிறகு புதிய முறைக் கல்வித் திட்டத்தை அமுல் நடத்த அவர்கள் ஆற்றல் உள்ளவர்களாயிருப்பார்கள். பரீட்சை, பிரம்படி, பெஞ்சி மேல் நிறுத்தல், மண்டையில் குட்டுதல் முதலிய காட்டு மிராண்டி சாதனங்களின் உதவியில்லாமல், அன்பின் உதவியினாலேயே பிள்ளைகளுக்குக் கல்வி கற்பிப்பது அவர்களுக்குச் சாத்தியமாகும். "பாடதிட்டங்களை இன்னின்னமாதிரி மாற்ற வேண்டும்; இன்னின்னபடி மாற்றினால் குழந்தைகளின் அறிவும் கற்பனா சக்தியும் வறண்டு போவதற்குப் பதிலாக வளர்ந்து பெருகும்; வாழ்க்கைக்கு உபயோகமாகவும் தேசத்துக்கு நன்மையாகவும் இருக்கும்" என்று சொல்லக் கூடிய சக்தி அப்போது ஆசிரியர்களுக்கு ஏற்படும்.

* * *

வாழ்க்கையிலே சந்தோஷமாக இருப்பதுதான் கல்விப் பயிற்சியின் தலைசிறந்த நோக்கமாயிருக்கவேண்டுமென்றும், இதற்காக எல்லாப் பிள்ளைகளுக்கும் சங்கீதம், நடனம் முதலிய ஆனந்தக் கலைகளைக் கற்பிக்க வேண்டும் என்றும் ராஜாஜி கூறியது மிக முக்கியமான விஷயம். ஆனால் பம்பாயில் ராஜாஜி கூறிய யோசனைகளில் எல்லாம் மிகச் சிறந்தது அவர் முடிவுரைப் பிரசங்கத்தில் கூறியதேயாகும். யுனிவர்ஸிடியின் சட்ட திட்டங்களும் சர்க்கார் கட்டுப்பாடுகளும் இல்லாமல், நாட்டிலேயுள்ள சிறந்த அறிவாளிகளுக்கு அவர்களுடைய இஷ்டம்போல் கல்வி முறையில் பரிசோதனைகள் செய்வதற்குச் சுதந்திரம் அளிக்க வேண்டும் என்று ராஜாஜி கூறியதை நிறைவேற்றினால், அதைக் காட்டிலும் நாட்டுக்கு நன்மை பயப்பது வேறொன்றும் கிடையாது. உதாரணமாக, அறிஞர் ஒருவர் குழந்தைகளுக்குப் பத்து வயது வரையில் எழுத்துக் கற்பிக்காமலும் புத்தகம் படிக்கச் சொல்லாமலும் வாய்மொழியாகவோ, பொருள்களைக் காட்டியோ, கைத்தொழில்கள் மூலமாகவோ கல்வி கற்பித்துப் பரிசோதனை செய்ய விரும்பினால், அதற்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுக்க வேண்டும். உலகப் பிரசித்தி பெற்ற மோண்டிசாரி அம்மை முதலியவர்கள் இம்மாதிரி சோதனைகள் செய்துதான் மனித குலத்துக்கே பரமோபகாரம் செய்திருக்கிறார்கள்.

சுருங்கச் சொன்னால், ராஜாஜியின் மேற்கண்ட யோசனையானது கலைமகளின் கைவிலங்கையும் கால் தளையையும் வெட்டி, அத்தேவிக்கு விடுதலை அளிக்கும் யோசனையாகும்.

அத்தகைய விடுதலை இந்நாட்டில் கலைமகளுக்குச் சீக்கிரமே சித்தியாகும் என்று எதிர்பார்ப்போமாக.

அந்த ஆனந்தகரமான சம்பவம் நடக்கும்போது இந்தப் புண்ணிய பூமியில் கலைமகளும் திருமகளும் அத்தியந்த சிநேகபாவத்துடன் கூடிக் குலாவுவார்கள் என்பதில் ஐயமில்லை.

# சோலைமலை இளவரசி






## 3. சேவல் கூவிற்று!

குமாரலிங்கம் சோலைமலையின் அடிவாரத்துக்கு வந்து சேர்ந்தபோது, மலைமேலே ஒளிர்ந்து அவனை அவ்விடத்துக்குக் கவர்ந்து இழுத்த முருகன் கோயிலின் அமர தீபம் அவன் பார்வைக்கு மறைந்து விட்டது. அதற்குப் பதிலாக, கீழ்த் திசையில் உதித்து மேலே சிறிது தூரம் பிரயாணம் செய்து வந்திருந்த விடி வெள்ளியானது உதய கன்னியின் நெற்றிச் சுட்டியில் பதித்த கோஹினூர் வைரத்தைப்போல் டால் வீசிற்று. அதுமட்டுமல்லாமல் வானத்தை மறைத்திருந்த மேகத் திட்டுக்கள் விலகி விட்டபடியால், ஆகாச வெளியெங்கும் கோடானுகோடி வைரச் சுடர்களை வாரி இறைத்தாற் போன்ற காட்சி தோன்றியது.

கிழக்கு நன்றாய் வெளுத்து, சுக்கிரனுடைய பிரகாசமும் மங்கத் தொடங்கிய சமயத்தில் குமாரலிங்கம் சோலைமலையை யடுத்திருந்த பாழடைந்த கோட்டையை அடைந்தான். களைப்பினால் அவனுடைய கால்கள் கெஞ்சின. தன்னை மீறி வந்த தூக்கத்தினால் கண்களும் தலையும் சுழன்றன. "இனிமேல் சிறிது தூரமும் நடக்க முடியாது. இந்தப் பாழடைந்த கோட்டைக்குள்ளே புகுந்து எங்கேயாவது ஓர் இடிந்த மண்டபத்தைப் பார்த்துப் படுத்துக் கொள்ள வேண்டியதுதான். ஜனசஞ்சாரம் இல்லாத இடம். பத்திரத்துக்குக் குறைவு ஒன்றுமில்லை!" என்று மனதில் எண்ணினான். மதிள் சுவர் இடிந்ததினால் ஏற்பட்டிருந்த வழி மூலமாகக் கோட்டைக்குள்ளே புகுந்து சென்றான். மிக வியப்பான எண்ணம் ஒன்று அப்போது அவன் மனதிலே தோன்றிற்று. அந்தக் கோட்டைக்குள்ளே முன் எப்போதோ ஒருசமயம் ஏறக்குறைய இதே மாதிரி சந்தர்ப்பத்தில் ஒளிந்து கொள்வதற்காகப் பிரவேசித்தது ஞாபகத்துக்கு வந்தது. எப்போது, எதற்காக அவ்விதம் நிகழ்ந்தது என்பதெல்லாம் ஒன்றும் தெளிவாகவில்லை.

மூன்று வருஷத்துக்கு முன்னால் அவன் இந்த மலைமேலுள்ள முருகன் கோயில் திருவிழாவுக்கு வந்திருந்தபோது அந்தப் பாழடைந்த கோட்டையை மேலேயிருந்து பார்த்தானே தவிர, அதற்குள்ளே பிரவேசிக்கவில்லை. பின், எப்போது அங்கே தான் வந்திருக்கக் கூடும்? இது என்ன பைத்தியக்கார எண்ணம்? கோட்டைக்குள்ளே மேலும் போகப் போக, அந்த எண்ணம் உறுதிப்பட்டு வந்தது. மேட்டிலும் பள்ளத்திலும் கல்லிலும் காரையிலும் அவன் ஏறி இறங்கி நடந்து சென்றபோது,

"நிச்சயமாக இங்கே முன்னொரு தடவை நாம் வந்திருக்கிறோம். ஆனால் அச்சமயம் இந்த இடங்கள் எல்லாம் இவ்விதமாக இல்லை!" என்று நிச்சயமாகத் தோன்றியது.

இன்னும் கொஞ்ச தூரம் சென்றதும் காடாக மண்டிக் கிடந்த மரம் செடிகளுக்கு மத்தியில் ஒரு சிறு மண்டபம் இருப்பது தெரிய வந்தது. அதற்குச் சற்றுத் தூரத்தில் மேல் மச்சுக்களெல்லாம் தகர்ந்து விழுந்து கீழ்த் தளம் மட்டும் அதிகம் சிதையாமலிருந்த ஒரு கட்டிடம் காணப்பட்டது. மேற்படி மண்டபமும் அப்பாலிருந்த கட்டிடமும் அவனுக்கு நன்றாய்ப் பழக்கப்பட்டவையாகத் தோன்றின. எப்பொழுது, எந்த முறையில் என்பது மட்டும் தெளிவாக வில்லை. தூக்க மயக்கத்தினால் நன்றாக யோசித்து ஞாபகப் படுத்திக் கொள்ள முடியவில்லை. "எல்லாவற்றுக்கும் இந்த மண்டபத்தில் சிறிது நேரம் படுத்து உறங்கலாம். உறங்கி எழுந்த பிறகு மனத் தெளிவுடன் யோசிக்கலாம்" என்று தீர்மானித்தான். அந்தத் தீர்மானத்தை நிறைவேற்றுவதற்காக மண்டபத்தின் விளிம்பில் ஒரு தூண் ஓரமாக உட்கார்ந்தான். கீழே தளம் அவ்வளவு சுகமாக இல்லை. குண்டும் குழியும் கல்லும் கட்டியுமாகத்தான் இருக்கிறது. தலைக்கு வைத்துக் கொள்ளவும் ஒன்றுமில்லை. "ஆனாலும் இனி ஒரு நிமிஷமும் தூக்கத்தைச் சமாளிக்க முடியாது. கையை மடித்துத் தலைக்கு வைத்துக்கொண்டு படுத்துக் கொள்ள வேண்டியதுதான்" என்று குமாரலிங்கம் எண்ணினான். அப்போது எங்கேயோ பக்கத்திலிருந்த கிராமத்திலிருந்து 'கொக்கரக்கோ!' என்று சேவல் கூவும் சத்தம் கேட்டது! கொக்கரக்கோ! கொக்கரக்கோ! கொக்கரக்கோ!

மூன்றாவது தடவை சேவல் கோழி 'கொக்கரக்கோ' என்று கூவிய போது, குமாரலிங்கத்தின் கண்ணெதிரே இந்திர ஜாலமோ, மகேந்திர ஜாலமோ என்று சொல்லும்படியாக ஒரு பெரிய அதிசயம் நிகழ்ந்தது. அவன் உட்கார்ந்த மண்டபம் புத்தம் புதிய அழகான வஸந்த மண்டபமாக மாறியது. மண்டபத்தைச் சுற்றியிருந்த காடு ஒரு நொடியில் மலர்கள் பூத்துக் குலுங்கிய செடிகளும் மரங்களும் உள்ள உத்தியான வனம் ஆயிற்று. அதற்கப்பாலிருந்த இடிந்த கட்டிடம் மூன்றடுக்கு மெத்தையுள்ள அழகிய வேலைப்பாடுகள் அமைந்த அரண்மனை ஆயிற்று. இன்னும் அதற்கு அப்பால் இரு புறங்களிலும் வேறு அழகிய கட்டிடங்கள், சுவர்களில் பூசிய முத்துச் சுண்ணும் பிறைச் சந்திரனின் மங்கிய வெளிச்சத்தில் தாவள்யமாகப் பிரகாசித்த கட்டிடங்கள், காணப்பட்டன. சேதம் சிறிது மில்லாத கோட்டைச் சுவர்கள், கோட்டை வாசல்களின் மேல் விமானங்கள் ஆகியவை, மங்கலாகவும் ஆனால் முழுவடிவத்துடனும் கண் முன்னே தோன்றின.

இந்த மாயாஜால மாறுதல் எல்லாம் சில விநாடி நேரத்திற்குள்ளேயே ஒன்றன்பின் ஒன்றாக நிகழ்ந்து குமாரலிங்கத்தைத் திக்கு முக்காடச் செய்தன. அதே சமயத்தில் அரண்மனை ஆசார வாசலில் நாதஸ்வரம் வாசிக்கும் இனிய ஓசையும், கோட்டை வாசலில் நகரா முழங்கும் சத்தமும் கேட்டன.

நல்ல அந்தகாரத்தில் பளிச்சென்று மின்னும் மின்னலில் விஸ்தாரமான பூப்பிரதேசத்தின் தோற்றம் கண்ணுக்குப் புலனாவது போல, அந்தப் பழைய கோட்டையின் அதிசயமான வரலாறு முழுவதும் குமாரலிங்கத்துக்கு ஞாபகம் வந்தது. ஏறக்குறைய இதே மாதிரி சந்தர்ப்பத்தில் முன்னொரு தடவை இந்தக் கோட்டைக்குள்ளே தான் பிரவேசித்தது முற்றிலும் உண்மை; அதில் சிறிதும் சந்தேகமே யில்லை.

* * *

இன்றைக்கு ஏறக்குறைய நூறு வருஷத்துக்கு முன்னால் தென் பாண்டி நாட்டில் மேற்கு மலைத் தொடருக்கருகில் இரண்டு பெரிய பாளையப்பட்டு வம்சங்கள் பிரசித்தி பெற்று விளங்கின. ஒவ்வொரு வம்சத்தின் ஆளுகையிலும் சுமார் 300 கிராமங்கள் உண்டு. மறவர் வகுப்பைச் சேர்ந்த பழந் தமிழ்க் குடிகளாகிய இரண்டு பாளையக்காரர்களும் பூரண சுதந்திரத்துடன் சிற்றரசர்களாக ஆட்சி

செலுத்தி வந்தார்கள். கீழே குடி படைகள் அவர்களுக்கு அடங்கி நடந்தார்கள். மேலே அவர்கள்மீது அதிகாரம் செலுத்துவதற்கோ, கப்பம் கேட்பதற்கோ உரிய பெரிய அரசாங்கம் எதுவும் கிடையாது. அப்படி யாராவது கப்பம் கேட்க வந்தால் அவர்களை எதிர்த்துப் போரிடும் வீரமும், போர் வீரர்களும் அவர்களிடம் இருந்தார்கள். சோலைமலையிலும், மாறனேந்தலிலும் நீடித்த முற்றுகையைச் சமாளிக்கக் கூடிய பெரிய கோட்டை கொத்தளங்கள் இருந்தன.

அக் காலத்திலேதான் 'கும்பெனி' யாரின் ஆட்சி பாரத நாடெங்கும் பரவிக்கொண்டு வந்தது. பண்டம் விற்கவும் பண்டம் வாங்கவும் வந்த வெள்ளைக்கார வியாபாரிகள் முதலில் தங்கள் சொத்துக்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக வீரர்களைச் சேர்த்துப் படை திரட்டினார்கள். பிறகு அந்தப் படைகளைக் கொண்டு நாடு பிடித்து அரசாளத் தொடங்கினார்கள். அரசாட்சியெல்லாம் ஈஸ்ட் இந்தியா கம்பெனியின் பெயரிலேயே நடந்தது. வியாபாரத்துக்காக வந்தவர்கள் அரசாங்கம் நடத்தத் தொடங்கினால் அதன் இலட்சணம் எப்படியிருக்கும் என்று சொல்ல வேண்டியதில்லை. எந்தெந்த முறையில் பொருள் திரட்டலாமோ, எவ்வளவு சீக்கிரத்தில் திரட்டலாமோ, அதுதான் கும்பெனி அரசாங்கத்தின் முக்கிய நோக்கமாயிருந்தது. நாட்டின் அரசாட்சி கையிலே இருந்தால், வியாபாரம் நன்றாய் நடக்கிறது என்றும், லாபம் ஒன்றுக்கு நாலு மடங்காகக் கிடைக்கிறது என்றும் கண்ட பிறகு மேலும் மேலும் இராஜ்யத்தை விஸ்தரிக்கத் தொடங்கினார்கள். சண்டையும் உயிர்ச் சேதமும் இல்லாமல் சாமதான பேத உபாயங்களினால் சில பிரதேசங்களைத் தங்கள் ஆட்சியின் கீழ்க்கொண்டு வந்தார்கள். உடுத்திக் கொள்ள ஸூட்டும் பூட்ஸூம் வேட்டையாடத் துப்பாக்கியும் அழகு பார்க்க நிலைக் கண்ணாடியும் க்ஷவரக் கத்தியும் கொடுத்துச் சில மகாராஜாக்களைத் தங்கள் வசத்தில் கொண்டு வந்தார்கள். அந்தந்தப் பாளையக்காரர்களுக்கு விரோதி யார் என்று தெரிந்து கொண்டு, விரோதிகளைப் பூண்டோடு அழித்து விடுவதாக வாக்குறுதி கொடுத்துச் சிலரைத் தங்கள் மேலதிகாரத்தை ஒப்புக்கொள்ளச் செய்தார்கள். இந்தியர்களின் பரம்பரைக் குலதர்மமான விருந்தோம்பல் குணத்தை உபயோகப் படுத்திக் கொண்டு சில சிற்றரசர்களையும் ஜமீன்தார்களையும் பிரிட்டிஷ் கும்பெனி ஆட்சியின் அத்தியந்த சிநேகிதர்களாக்கிக் கொண்டார்கள். இந்த வருஷம் சிநேகிதர்களா யிருந்தவர்களை அடுத்த வருஷம் அடிமைகளாக்கினார்கள்.

இப்படியெல்லாம் நடந்து கொண்டிருந்த காலத்தில், சோலைமலைக் கோட்டையின் புராதன சிங்காதனத்தில் வீற்றிருந்து செங்கோல் செலுத்தி வந்த மகா ராஜாதிராஜ வீர ராமலிங்க குலோத்துங்க ருத்திரத் தேவர் பிரிட்டிஷ் கும்பெனியாரின் அத்தியந்த சிநேகிதர் ஆனார். கப்பல் ஏறிக் கடல் கடந்து வியாபாரம் செய்ய வந்த வெள்ளைக்காரச் சாதியாரின் அதி அற்புத சாமர்த்தியங்களைப் பற்றி ஏற்கனவே சோலைமலை மகாராஜா ரொம்பவும் கேள்விப்பட்டிருந்தார். எனவே ஆங்கிலேயன் ஒருவன் துப்பாக்கிகள் தோட்டாக்கள் சகிதமாகச் சோலைமலைக்கு வந்து, மகாராஜாவுக்குப் பெரிய ஸலாம் ஒன்று போட்டு, சோலைமலைக் கோட்டையை அடுத்த காடுகளில் வேட்டையாட விரும்புவதாகத் தெரிவித்ததும், மகாராஜாவின் ஆனந்தம் அளவு கடந்ததாயிற்று. வேட்டைக்கு அனுமதி கொடுத்ததோடு, தாமே அவனுடன் வேட்டைக்குக் கிளம்பிப் போனார். ஆங்கிலேயன் அவருக்குத் துப்பாக்கியை உபயோகிக்கக் கற்றுக் கொடுத்தான். இம்மாதிரி ஆரம்பமான சிநேகம் சீக்கிரத்தில் நெருங்கிய அத்தியந்த நட்பாக முதிர்ந்தது. சீமையிலிருந்து மேற்படி ஆங்கிலேயன் கொண்டு வந்திருந்த இனிப்பும் போதையும் கொண்ட சாராய வகைகள் அவர்களுடைய நட்பு முதிர்வதற்கு ரொம்பவும் துணை செய்தன. சில காலைக்குள்ளே அந்த ஆங்கிலேயனுடைய சிநேகிதர்கள் சிலரும் சோலைமலைக் காடுகளில் வேட்டையாடுவதற்கு வந்து சேர்ந்தார்கள்.

# 4. வன்மம் வளர்ந்தது !

சோலைமலை சமஸ்தானத்துக்கு ஆங்கிலேயர்கள் வந்து சேர்ந்த சமயம், சோலைமலை மகாராஜாவுக்கும் அந்தச் சமஸ்தானத்தை அடுத்திருந்த மாறனேந்தல் மகாராஜாவுக்கும் கொஞ்சம் மனத்தாங்கல் ஏற்பட்டிருந்தது. எல்லைத் தகராறு காரணமாக ஏற்பட்ட மனத்தாங்கல் தான். மேற்படி தகராறில் இரண்டு மூன்று தடவை சோலைமலை வீரர்களை மாறனேந்தல் வீரர்கள் முறியடித்துத் துரத்தியடித்துவிட்டார்கள். இதற்கு முக்கிய காரணம் மாறனேந்தல் மகாராஜாவின் மூத்த புதல்வனான யுவ



மகாராஜா உலகாத சுந்தர பாண்டியத் தேவனின் துடுக்கும் அகம்பாவமுந்தான் என்று தெரியவந்தது.

சோலைமலை மகாராஜா தமது ஏக புதல்வியான பரிமள மாணிக்கவல்லித் தேவியை மாறனேந்தல் இளவரசனுக்குக் கல்யாணம் செய்விக்கலாம் என்று ஒருகாலத்தில் எண்ணியிருந்ததுண்டு. மாறனேந்தல் வம்சம் அந்தஸ்திலும் பூர்விகத்திலும் சோலைமலை வம்சத்துக்குக் கொஞ்சம் தாழ்ந்ததாயிருந்த போதிலும், பக்கத்து சமஸ்தானமாயிருப்பதால் தமது உயிருக்குயிரான அருமைப் புதல்வியை அடிக்கடி பார்ப்பதற்கு வசதியாயிருக்கும் என்ற அந்தரங்க ஆசையினால் மேற்கண்ட யோசனை அவர் மனதில் உதித்தது. ஆனால் அந்த எண்ண மெல்லாம் இப்போது அடியோடு மாறிவிட்டது. தமது அருமை மகள் வாழ்நாள் எல்லாம் கன்னிகையாகவே இருக்க நேர்ந்து, சோலைமலை சமஸ்தானம் சந்ததியின்றி அழிந்து போனாலும்சரி, மாறனேந்தல் இளவரசனுக்கு அவளை மணம் செய்து கொடுப்பதில்லை யென்று தீர்மானித்தார். தம்மை அவமதித்த மாறனேந்தல் மகாராஜாவையும் அவருடைய மகனையும் பழிக்குப் பழி வாங்கி அந்த வம்சத்தையே பூண்டோடு அழித்து விட வேண்டும் என்ற வன்மம் அவர் மனதில் தோன்றி வைரம் பாய்ந்து நாளுக்கு நாள் வளர்ந்து வந்தது.



**மா**றனேந்தல் சமஸ்தானத்தைப் பற்றிச் சோலைமலை மகாராஜாவின் மனோ நிலையைத் தெரிந்து கொண்ட அவருடைய வெள்ளைக்காரச் சிநேகிதர்கள் கொஞ்சங் கொஞ்சமாக அந்த வன்மத்துக்குத் தூபம் போட்டு வளர்த்தார்கள். மாறனேந்தலைப் பழி தீர்க்கத் தங்களுடைய உதவியை அளிக்கவும் முன் வந்தார்கள். இதன் பேரில் சோலைமலை மகாராஜாவுக்கும் கும்பெனியாருக்கும் சிநேக உடன்படிக்கை ஏற்பட்டது. ஒருவருடைய சிநேகிதர்களும் பகைவர்களும் மற்றவருக்கும் சிநேகிதர்கள் பகைவர்கள் என்றும், யுத்தம் நேர்ந்தால் ஒருவருக் கொருவர் சகாயம் செய்து கொள்ள வேண்டும் என்றும், முக்கியமாக மாறனேந்தல்

ஒன்றும் இல்லை. சோலைமலை மகாராஜா எப்படியும் இந்த நாட்டிலே பிறந்து வளர்ந்தவர். பழைய மறவர் பெருங் குடியைச் சேர்ந்தவர். தங்களையும் நமது குடும்பத்தாரையும் அனியர்களாகிய வெள்ளைக்காரர்கள் அவமதிப்பாக நடத்துவதற்கு அவர் சம்மதிக்க மாட்டார். நமக்கும் ஒரு காலம் கூடிய சீக்கிரத்தில் வந்தே தீரும். வட தேசத்திலே இந்த வெள்ளை மூஞ்சிகளை நாட்டை விட்டுத் துரத்துவதற்காக அநேக பெரிய பெரிய மகாராஜாக்களும் நவாப்புகளும் சேர்ந்து யோசனை செய்து வருகிறார்களாம். அவர்களிடம் போய் நானும் சேர்ந்து கொள்ளுகிறேன். பெரிய படை சேர்த்துக் கொண்டு திரும்பி வருகிறேன். அது வரையில் தாங்கள் பொறுமையுடன் இருக்க வேண்டும்!" என்று கேட்டுக் கொண்டான். தந்தை அதற்குச் சரியான பதில் சொல்லாமல், "சமயோசிதம் போல் பார்த்துக் கொள்கிறேன். எங்களைப் பற்றிக் கவலைப் படாதே! நீ உடனே புறப்படு!" என்றார். வெளி நாட்டிலிருந்து வந்த பகைவர்களாவது தயவு தாட்சண்யம் காட்டுவார்கள், உள்ளூர்ப் பகைவர்களிடம் சிறிதும் கருணையை எதிர் பார்க்க முடியாது என்னும் உண்மையை வயது முதிர்ந்த மாறனேந்தல் மகாராஜா அறிந்திருந்தார். ஆனால் அந்தச் சமயம் அதைப்பற்றித் தம் குமாரனிடம் வாக்குவாதம் செய்ய அவர் விரும்பவில்லை.

மாறனேந்தல் இளவரசன் கோட்டையின் இரகசிய வழியாக அன்றிரவே வெளியேறினான். கோட்டையிலிருந்து இரண்டு காத தூரத்தில் இருந்த மேற்கு மலைத்தொடரை அடைந்து அங்குள்ள காடுகளில் சிலகாலம் ஒளிந்திருக்கலாம் என்ற எண்ணத்துடன் விரைந்து சென்றான். ஆனால் பொழுது புலரும் சமயத்தில் எதிர்ப் புறத்திலிருந்து மாறனேந்தல் முற்றுகையில் சேர்ந்து கொள்வதற்காக வந்த கும்பெனிப் படை வீரர்களில் ஒருவன் சாலை ஓரமாக ஒளிந்து சென்ற இளவரசனைப் பார்த்து விட்டான். யுத்த கால தர்மப்படி, "யாரடா அங்கே போகிறவன்?" என்று கேட்டான். அவனுக்கு மறுமொழி சொல்லாமல் இளவரசன் காட்டிலே புகுந்து ஓடினான். கும்பெனி வீரர்களின் சந்தேகம் அதிகமாயிற்று. படைத் தலைவன் அவனைத் துரத்திப் பிடித்துக் கொண்டு வரும்படி ஆறு வீரர்களை நிறுத்திவிட்டு மற்றவர்களுடன் மேலே சென்றான்.

தன்னைத் தொடர்ந்து ஆறு வீரர்கள் தான் வருகிறார்கள் என்பது இளவரசனுக்குத் தெரியாது. தான் மாறனேந்தல் இளவரசன் என்பதாகத் தெரிந்து கொண்டு ஒரு பெரிய படை தன்னைத் தொடர்ந்து வருவதாகவே நினைத்தான். அவர்களிடம் எப்படியும் அகப்படக் கூடாது என்று மனதை உறுதி செய்து கொண்டு அடர்ந்த காடுகளில் புகுந்து ஓடினான். கடைசியாக, சோலைமலையின் அடிவாரத்தை அடைந்தான். சற்றுத் தூரத்தில் சோலைமலைக் கோட்டை தென்பட்டது. அதன் சமீபத்தில் போவதற்கே அவனுக்கு இஷ்டமில்லாமலிருந்தாலும், வேறுவழி ஒன்றும் காணவில்லை. அந்தக் கோட்டை மதிளின் ஓரமாகச் சென்று கோட்டையைக் கடந்து போனால்தான் அப்பால் மலைமேல் ஏறுவதற்குச் சௌகரியமான சரிந்த பாதை இருந்தது. இளவரசன் அப்போது வந்து சேர்ந்திருந்த இடத்தில் பாறை செங்குத்தாகக் கிளம்பியது. சற்று நின்று யோசித்த பிறகு, பின்னால் சமீபத்தில் கேட்ட காலடிச் சத்தத்தினால் உந்தப்பட்டவனாய், இளவரசன் மேலும் விரைந்தான். அவனுடைய கால்கள் கெஞ்சின; தலை சுழன்றது; கண்கள் இருண்டு வந்தன. கோட்டை மதிளை அடுத்திருந்த குறுகலான வழியில் அவன் போய்க்கொண்டிருந்தான். பின்னால் காலடிச்சத்தம் விநாடிக்கு விநாடி நெருங்கி வந்து கொண்டிருந்தது. மேலே ஓர் அடிகூட இனிமேல் நடக்க முடியாது என்று தோன்றியது. ஒரு பக்கம் கோட்டைச் சுவரும் மற்றொரு பக்கம் கிடுகிடு பள்ளமுமாக இருந்த அந்தக் குறுகிய பாதையில் அப்பால் இப்பால் நகர்ந்து தப்புவதற்கு வழியேயில்லை. வேட்டை நாய்களைப் போல் தன்னைத் துரத்திக் கொண்டு வரும் எதிரி வீரர்களிடம் அகப்பட்டுக் கொள்ளவேண்டியதுதான். (தொடரும்)





# ஆரூரர் அருள்

தமிழ் நாட்டிலுள்ள திவ்ய ஸ்தலங்களில் திருவாரூர் மிக முக்கியமானது. திருவாரூர் தேரின் மகிமையைப் பற்றியும், கமலாலயம் என்னும் திருக்குளத்தின் சிறப்பைப் பற்றியும் கேள்விப்படாதவர் யார்? அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகியவர்களின் தீஞ்சுவைத் தமிழ்ப் பாடல்களில் தில்லையம்பதிக்கு அடுத்தபடியாக அதிகமான பாடல்களைப் பெற்ற க்ஷேத்திரம் திருவாரூரே யாகும்.

அத்தகைய கவிதைச் செல்வத்தோடு ஏராளமான நிலவளச் செல்வத்தையும் பெற்றுள்ள திருவாரூர் தியாகேசர் தமது அடியார்களில் மிகத் தீனர்களும், எத்தனையோ நூறு வருஷமாகத் தமது தேரை இழுத்தவர்களுமான ஹரிஜனங்களின் மீது கருணை கொண்டார். தானது 1947-ம் வருஷம் ஜனவரி முதல் தேதி யன்று ஆலயத் திருக் கதவுகளை நன்குத் திறந்துவிட்டு, "பக்தர்கள் எல்லாரும் வரலாம்; தர்சனம் பெறலாம்!" என்று அருள் புரிந்தார்.

மேற்படி ஆலயத் திறப்பு வைபவம் சம்பந்தமான சில படங்களை இங்கே வெளியிட்டிருக்கிறோம். கடுமையான வைதிகத்துக்கும், பெயர்போன மிராசுதார் அதிகாரத்துக்கும் பெயர்போன தஞ்சை ஜில்லாவில் இந்த வைபவம் நடந்தது





# புரிந்தார்!

த்ததனை முக்கியமானது என்று
சொல்ல வேண்டியதில்லை. அவ்வளவு
க்கியமான வைபவத்தில் தலைமை
கித்துச் சேர்ந்து கொள்வதற்கு
இடைக்காத நேரிய சர்க்காரின்
தொழில் மந்திரி ஸ்ரீ ஜகஜீவன்ராம்
கொடுத்து வைத்திருந்தார். எதிர்ப்
பக்கத்தில் அந்த அதிர்ஷ்டக்கார
ரைப் பார்க்கலாம். இந்தப் பக்கத்தில்
ஞ்சாவூர் மிராசுதார் குடும்பங்களில்
சிறந்த குடும்பத்தைச் சேர்ந்தவ
ரும், திருவாரூர் ஆலய தர்மகர்த்தாவு
மான வடபாதிமங்கலம் ஸ்ரீ தியாக
ராஜ முதலியார் எம். ஏ. அவர்களைக்
காணலாம். இவர் பிரயாசத்தில் ராஜ
சாபப் பட்டத்தைத் அதப்பதற்கும்,
திருவாரூர்க் கோயிலைத் திறப்பதற்
கும் துணிவு கொண்ட ஸ்ரீ முதலியா
ருக்கு நமது மனமார்ந்த வாழ்த்
துக்கள். திருவாரூர் ஹரிஜன சங்கத்
தலைவரும் கே. டி. ஆர். கம்பெனி
சொந்தக்காரருமான ஸ்ரீ ராதா
கிருஷ்ணன் அவர்களையும் மற்றும்
இந்த வைபவத்துக்கு உதவிபுரிந்
தவர்கள் அனைவரையும் மகிழ்ச்சி
யுடன் பாராட்டுகிறோம்.





# இளம் பிராயப் பெருந் தலைவர்

முப்பத்திரண்டாவது பிராயத்தில் ஒரு பெரிய தேசத்தின் முதன் மந்திரி பதவிக்கு வருவதென்பது சாதாரணமாய் அடிக்கடி நடக்கக் கூடியதல்ல. உலக சரித்திரத்திலேயே அம்மாதிரி ஒரு சில சம்பவங்கள்தான் உண்டு. பர்மா தேசிய சர்க்காரின் வைஸ் பிரஸிடெண்ட் மேஜர் ஜெனரல் அவுங்-ஸான் அத்தகைய அபூர்வ இனத்தைச் சேர்ந்தவர். புது டில்லியில் அவுங்-ஸான் ஆகாச விமானத்திலிருந்து இறங்கியபோது, "பர்மாவின் பிரசித்தி பெற்ற முதன் மந்திரி இவர்தான்" என்று யாரும் எண்ணவே யில்லையாம். "அவுங்-ஸான் கோஷ்டியைச் சேர்ந்த வாலிபர் இவர்; அவுங்ஸான் இனிமேல்தான் இறங்குவார்" என்று எண்ணி யிருந்தார்களாம். பண்டித ஜவாஹர்லால்ஜி அவரை ஆர்வத்துடன் ஆலிங்கனம் செய்துகொண்டு வரவேற்றபோதுதான் உண்மை தெரிந்ததாம்.

பர்மா அரசியலில் பழந் தின்று கொட்டையும் போட்ட மாஜி பிரதம மந்திரி ஊ-ஸா, டாக்டர் பா-மா முதலியவர்கள் எல்லாரும் இருக்க, இந்தச் சிறு பிள்ளை அவுங்-ஸான் பர்மாவின் தலைசிறந்த தலைவர் ஆனது ஓர் அதிசயமான விஷயம்,

1940-ம் வருஷத்தில் அவுங்-ஸான் இந்தியாவுக்கு வந்திருந்தாராம். ராம்கார் காங்கிரஸ் நடந்தபோது மகாத்மாஜி, ஜவாஹர்லால்ஜி முதலியவர்களைப் பார்த்துப் பேசிவிட்டுப் போனாராம். பிரதம மந்திரி ஊ-ஸாவைப் பாதுகாப்பில்வைத்த பிரிட்டிஷ் சர்க்கார் அவுங்-ஸானுக்கும் வாரண்டு பிறப்பித்தார்களாம். அவுங்-ஸான் வாரண்டுக்குத் தப்பி ஓடி ஜப்பானுக்குச் சென்றாராம். அங்கே திறமையான ராணுவப் பயிற்சி பெற்று, பர்மாமீது படையெடுத்து வந்த ஜப்பானியரோடு திரும்பி வந்தாராம். பர்மா ஜப்பானால் ஜெயிக்கப்பட்ட பிறகு, மேஜர் ஜெனரல் அவுங்-ஸான் ஜப்பானியரின் உண்மை ஸ்வரூபத்தை அறிந்து அவர்களைப் பர்மாவிலிருந்து துரத்துவதற்காக ஒரு பெரும் படையும் பிரங்கி முதலிய ஆயுதங்களும் இரகசியமாகச் சேகரித்து வந்தாராம். பிரிட்டிஷார் திரும்பி வந்தபோது அவர்களுடன் சேர்ந்துகொண்டு ஜப்பானியரை விரட்டினாராம்.




பர்மா தலைவர்களுக்குள்ளே எல்லாரையும்விட அவுங்-ஸான்தான் செயல் திறமையும் ஜனங்களிடையே செல்வாக்கும் உள்ளவர் என்பதைக் கண்ட பிரிட்டிஷார் அவரை பர்மா இடைக்கால தேசிய சர்க்காரின் வைஸ்-பிரஸிடெண்ட் ஆக்கினார்கள். ஜப்பானியரை விரட்டுவதற்காக அவர் இரகசியமாகத் தயாரித்த சுமார் ஐம்பதினாயிரம் வீரர்கள் அடங்கிய படை இன்னமும் அவருக்குப் பக்கபலமாய் இருந்து வருகிறது. அவுங்-ஸானையும் மற்ற பர்மா மந்திரிகளையும் பிரிட்டிஷார் லண்டனுக்கு அழைத்த காரணமும் மேற் கண்டதுதான்.

அவுங்-ஸான் பேச்சுத் திறமையோ, முகவெட்டோ, முதிர்ந்த அநுபவமோ உடையவர் அல்ல. ஆனால் சிறந்த நிர்வாகத் திறமையுடைய இராஜதந்திரி அவர் என்று தெரிய வந்திருக்கிறது. சுயநலம் கருதாமல் பர்மாவின் சுதந்திரத்துக்காகப் பாடுபடுவதால் பர்மிய மக்களின் பக்கபலம் அவருக்கு இருக்கிறது. இந்த வசதிகள் பெற்றிருக்கிறபடியால் லண்டனுக்கு அவர் போயிருக்கும் காரியத்திலும் வெற்றி பெற்றுத் திரும்பக்கூடும். அதாவது ஒரு வருஷத்துக்குள் பர்மா பூரண சுதந்திரம் அடையும் ஏற்பாட்டுடன் அவர் திரும்பி வரலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

அப்படி அவர் போன காரியம் வெற்றிபெறாமல் வெறுங் கையுடன் திரும்பி வந்தால் பர்மாவுக்கும் போய்ச் சும்மா இருப்பார் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. மீண்டும் சுதந்திரப் போர் நடத்த வேண்டி வரலாம் என்று எதிர்பார்த்துப் பர்மா தேச மெங்கும் யாரும் கண்டு பிடிக்க முடியாத இடங்களில் எத்தனையோ பிரங்கிகளையும் துப்பாக்கிகளையும் அவர் ஒளித்து வைத்திருக்கிறார் என்று சொல்லப்படுகிறது.

சுதந்திரப் போரில் அஹிம்சா தர்ம வழியைப் பின்பற்றும் இந்தியா முதலில் பூரண சுதந்திரம் அடைகிறதா, பலாத்காரத்தில் நம்பிக்கையுள்ள பர்மா முதலில் பூரண சுதந்திரம் அடைகிறதா என்பதில் ஒரு பெரும் போட்டி விரைவில் ஏற்படலாம்.

அவுங்-ஸான் டில்லிக்கு வந்தபோது நமது புகைப்பட நிபுணர் கே. நடராஜன் எடுத்த படத்தை அவுங்-ஸானின் சுயஹஸ்த லிகிதத்துடன் அட்டையில் வெளியிட்டிருக்கிறோம். இராணுவ உடையில் அவுங்-ஸான் தோற்றத்தையும் மேலே காணலாம்.

வம்சத்தின் கொட்டத்தை அடக்கச் சோலைமலை மகாராஜாவுக்குக் கும்பெனியார் உதவி செய்வார்கள் என்றும் உடன்படிக்கையில் கண்டிருந்தது. அதற்குப் பதிலாகச் சோலைமலை சமஸ்தானத்தில் கும்பெனியாருக்குச் சிற்சில விசேஷ உரிமைகளும் சலுகைகளும் அளிக்கப்பட்டன.

இந்தச் செய்திகள் எல்லாம் மாறனேந்தல் யுவராஜா உலகநாதத் தேவனுக்குத் தெரிய வந்தபோது, அந்த இளங் காளையின் அகம்பாவமும் வாய்த் துடுக்கும் பன்மடங்கு அதிகமாயின. சோலைமலை ராஜாவைப் பற்றி அவன் நாலுபேர் முன்னிலையில் பகிரங்கமாக அவதூறு சொல்லவும் பரிகாசமாய்ப் பேசவும் ஆரம்பித்தான். சோலைமலை ராஜாவின் மூளை கலங்கி விட்டது என்றும், அரண்மனைக் கோயிலில் இருந்த அம்மன் விக்கிரகத்தை அப்புறப்படுத்திவிட்டு அங்கே விக்டோரியா மகாராணியின் படத்தை வைத்துத் தினம் மூன்று தடவை பூசை செய்கிறார் என்றும், வெள்ளைக்காரனைக் கண்டால் உடனே விழுந்து கும்பிடுகிறார் என்றும், வெள்ளைக்காரனைப் பார்த்துக் குரைத்த குற்றத்துக்காக அவருடைய அரண்மனையில் இருந்த வேட்டை நாய்கள் எல்லாவற்றையும் சுட்டுக்கொன்றுவிட்டார் என்றும், லண்டனில் தெருக் கூட்டிக் கொண்டிருந்த வெள்ளைக்காரத் தோட்டியின் மகனுக்குச் சோலைமலை இளவரசியைக் கலியாணம் செய்து கொடுக்கப் போகிறார் என்றும், அர்த்த ராத்திரியில் திடீரென்று தூக்கத்திலிருந்து எழுந்து உட்கார்ந்து மேற்குத் திசையை நோக்கிப் பளீர் பளீர் என்று கன்னத்தில் போட்டுக் கொள்கிறார் என்றும், — இப்படியெல்லாம் மாறனேந்தல் இளவரசன் நாலுபேர் முன்னிலையில் பரிகாசமாகப் பேசிச் சிரித்த செய்திகள் காற்றிலே மிதந்து வந்து சோலைமலை மகாராஜாவின் காதிலே ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவதுபோல் பாய்ந்தன.

மேற்படி செய்திகளினால் எல்லாம் மகாராஜா வீரராமலிங்கத் தேவருக்குத் தம்முடைய புதிய சிநேகிதர்களான வெள்ளைக்காரத் துரைகள் மீதோ கும்பெனி சர்க்கார் மீதோ கோபம் வரவில்லை. மாறனேந்தல் மகாராஜாவிடமும் யுவராஜாவிடமுந்தான் அளவில்லாத கோபம் பொங்கிப் பெருகிற்று. அவர்களை நினைக்கும்போதெல்லாம் அவர் இரணியகசிபு, இராவணன், சூரபத்மன் முதலான இராட்சஸர்களுடைய சுபாவத்தை அடைந்து, அவர்களைக் கண்டதுண்டமாக வெட்டிக் கொன்று தின்றுவிட வேண்டும் என்பதாக வெறி கொள்ளத் தொடங்கினார்!

காலா காலத்தில் சோலைமலை மகாராஜாவுக்குத் தமது மனோரதத்தை நிறைவேற்றிக் கொள்வதற்கான சந்தர்ப்பம் கிடைத்தது. ஏதோ ஒரு வியாஜத்தை வைத்துக் கொண்டு கும்பெனியாரின் படைகள் மாறனேந்தல் கோட்டையைத் தாக்கின. அந்தப் படைகளில் சோலைமலை மகாராஜாவின் வீரர்களும் சேர்ந்துகொண்டிருந்தார்கள் என்று சொல்லவேண்டியதில்லை. மாறனேந்தல் வீரர்கள் கோட்டைக்குள்ளேயிருந்து ஒப்பற்ற வீரத்துடனே போர் புரிந்தார்கள். ஆனாலும் கும்பெனிக்காரர்கள் கொண்டு வந்திருந்த நெருப்பைக் கக்கும் பீரங்கிகளுக்கு முன்னால் எந்தக் கோட்டைதான் அதிக காலம் தாக்குப் பிடித்து நிற்க முடியும்? எத்தகைய வீரர்கள்தான் எதிர்த்து நிற்க முடியும்?

கோட்டை விழுந்தது! விழுவதற்கு முன்னால் மாறனேந்தல் மகாராஜா தம் மூத்த புதல்வனை இளவரசனைக் கூப்பிட்டு, "குழந்தாய்! இனிமேல் நம்பிக்கைக்கு இடமில்லை. மாறனேந்தல் வம்சம் விளங்குவதற்கு நீ ஒருவனாவது பிழைத்திருக்க வேண்டும். கோட்டையின் இரகசிய வழியின் மூலமாகத் தப்பி ஓடிச் சிலகாலம் தலைமறைவாக இருந்துகொள். தக்க சந்தர்ப்பம் பார்த்து, அந்தச் சோலைமலை ராட்சதனையும், அவனுக்குத் துணையாக வந்த வெள்ளை மூஞ்சிக் குரங்குகளையும் பழிவாங்கு!" என்று சொல்லி, அவ்விதமே அவனிடம் வாக்குறுதி பெற்றுக் கொண்டார். பதிலுக்கு இளவரசன், "அப்பா! நீங்களும் எனக்கு ஒரு வாக்குறுதி தரவேண்டும். நான் கோட்டையிலிருந்து வெளியேறிய பிறகு சண்டையை நிறுத்தி விடுங்கள். வீரப் போர் புரிந்து தோல்வியடைவதில் அவமானம்

# விஞ்ஞானிகள் மகாநாடு

சமீபத்தில் புது டில்லியில் நடந்த இந்திய விஞ்ஞானிகள் மகா நாட்டுக்கு வெளிநாடுகளிலிருந் தெல்லாம் பிரதிநிதிகள் வந்திருந் தார்கள். தேசிய சர்க்காரின் மந்திரிகளும் ஆஜராகியிருந்தார்கள்.

மேலே: கல்வி-கலை மந்திரி ராஜாஜி, அமெரிக்காவுக்கு முதலாவது இந்தியத் தூதராகப் போகும் ஜனாப் ஆஸப் அலி, சுரங்க இலாகா மந்திரி ஸ்ரீ பாபா ஆகியவர்கள் மகாநாட்டு நடவடிக்கைகளை ஆழ்ந்து கவனிக்கிறார்கள். கீழே: பண்டித ஜவாஹர்லால் நேருவும் டாக்டர் மத்தாயும் ஸ்ரீமதி மத்தாயும் மகாநாட்டுக்கு விரைந்து வருகிறார்கள்.



# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 165. நிற்கிற நிலை என்ன நிலை?

ராமனுடைய குரலில் "என் உயிர் போகிறதே!" என்று மாரீசன் கூக்குரலிட்ட சத்தம் சீதையின் காதில் விழுந்தது. "அடடா! மானைப் பிடித்துத் தரவேண்டும் என்று நான்தானே சொன்னேன்? ஐயோ! என் நாயகன் உயிருக்கு உலை வைத்து விட்டேனே!" என்று அலறித் தரையில் விழுந்து புரண்டு கொண்டிருந்தாள். பிறகு உணர்ச்சி அற்றவளாய் அப்படியே கிடந்தாள்.

சிறிது நேரங் கழித்து உணர்ச்சி வந்தது. ஏறிட்டுப் பார்த்தாள். லக்ஷ்மணன் தன் பக்கத்திலேயே நின்று கொண்டிருந்தான்!

துயரம், கோபமாக மாறியது. "இன்னும் இங்கேயா நிற்கிறாய்? நீயும் ஒரு தம்பியா?" என்று அரைகுறை உணர்ச்சியோடு கேட்டாள் லக்ஷ்மணனைப் பார்த்து.

சீதையின் துயரத்தையும் பதைபதைப்பையும் லக்ஷ்மணன் பார்த்தான். அவன் மனம் இரக்கத்தினால் இளகி விட்டது. பரிவுடன் சொல்லுகிறான்:

"உலகத்தில் வீரரென்று சொல்லுகிறவர்களை எண்ணினால் ராமனுக்கு எதிரில் அவர்கள் எல்லாரும் சாமான்யப்பட்ட வெறும் ஆட்கள்தான். ராமனை வெல்லுவதற்கு உலகத்தில் வேறு ஒருவர் உண்டா?"

சந்தம்

தானன தானன
　தானன தன்னன

'எண்மையார் உலகினில்
　இராமற்(கு), ஏற்றமாம்
திண்மையார் உளர்எனல்
　செப்பல்ப் பாலதோ?
பெண்மையால் உரைசெயப்
　பெறுதி ரால்'என
உண்மையான் அனையவட்(கு)
　உணரக் கூறினான்.

[எண்மையார் உலகினில்: வீரத்தில் எளிமைப்பட்ட, உலகத்தில்: இராமற்கு ஏற்றமாம்: ராமனுக்கு ஒப்பான; திண்மையார் உளர் எனல்: வீரம் பொருந்தியவர்கள் உண்டு எனல்; செப்பல்ப் பாலதோ: வெளியில் எடுத்துச் சொல்லக்கூடிய காரியமா; பெண்மையால் உரைசெயப் பெறுதிரால்: இராமனுடைய வீரத்தை அறிகிறதற்குப் பெண்களுக்குச் சந்தர்ப்பம் ஏது? அது காரணமாகத்தான் நீ இப்படிச் சொல்லுறாய்; உண்மையான்: ராமனது வீரத்தை உண்மையில் உணர்ந்த லக்ஷ்மணன்; அனையவட்கு உணரக் கூறினான்: அந்தச் சீதைக்கு மனசில் பதியும்படியாகவே சொன்னான்.]

மேலும் சொல்லுகிறான் லக்ஷ்மணன்: "அரக்கர்களுக்கு ராமன் வலியற்றவனாகிறதுண்டோ? அந்த அரக்கர்களால் இடுக்கண் நேரிடுகிறதும் உண்டோ? அப்படியே நேரிட்டாலும் துணை வேண்டுமே என்று அழைக்கிறதும் உண்டோ? அப்படி அழைக்கிறது என்று ஏற்பட்டால், அதற்குள் பேர் அண்டங்களே தகர்ந்து போகும். பிரமன் முதலிய சகல உயிர்களும் தீர்ந்து போகும் அல்லவா? ஏன் உமக்கு இந்தக் கலவரம்?"

'இடைந்துபோய் நிசொரற்(கு)
　இராமன் எவ்வம்வந்(து)
அடைந்தபோ(து) அழைக்குமே!'
　அழைக்குமாம்எனின்,
மிடைந்தபேர் அண்டங்கள்
　மேல கீழன
உடைந்துபோம்; அயன்முதல்
　உயிரும் ஓயுமால்!'

[இடைந்து போய் நிசொற்கு: அரக்கர்கள் எதிர்த்து அது காரணமாக வலிகெட்டு: ராமன் எவ்வம் வந்து அடைந்த போது அழைக்குமே: துன்பம் வந்து அடைந்தபோது ராமன் கூக்குரல் போடுகிறதும் உண்டா? அழைக்குமாம் எனின்: அப்படியும் கூக்குரல் போடுகிறது ஏதோ உண்டென்று வைத்துக் கொண்டுவோமானால்; மிடைந்த பேர் அண்டங்கள்: ஆகாயத்தில் நெருங்கிக் கிடக்கிற பேர் அண்டங்கள் எல்லாம்; மேலகீழனை: வான் முகட்டினானாலும் பாதாளத்தினானாலுஞ் சரி; உடைந்துபோம்: தகர்ந்து போகவேண்டுமே!—அது மாத்திரம் அல்ல; அயன் முதல் உயிரும் தீயுமால்: பிரமனும் அவனால் ஆக்கப்படும் உயிர் வர்க்கங்களும் வெந்து அழிந்து போகவேண்டுமே!

குறிப்பு:—ராமனது வில் திறத்தையும் வீரத்தையும் சொம்பவும் அனுபவித்தவன் லக்ஷ்மணன். அரக்கர்களால் ராமனுக்கு ஏதேனும் அபாயம் நேரிடும் என்பது எந்த விதத்திலும் இயலாத காரியம் என்பது தெரியும். இந்த உறுதிபாவம் செய்யுளில் பிறக்கிறது.

கம்பர் காலத்தில் வில் திறத்தால் சாதிக்கக் கூடிய காரியம் வேறொன்றும் சாதிக்க முடியாதுதான். தமிழ் நாட்டில் கண்ட கம்பரது அனுபவம் இது.]

லக்ஷ்மணன் இன்னும் வாதாடுகிறான்: “விரிவாக வேறு என்ன சொல்லக் கிடக்கிறது எனக்கு? வில்வித்தையில் கை தேர்ந்து பண்பட்டவனான ராமன் அம்பை எய்தான்; அந்த அம்பு பாய்ந்த அரக்கன் கூக்குரலிட்டிருக்கிறான்: அவ்வளவுதான்.”

‘பரக்கஎன் பகர்வது,
பகழி பண்ணவன்
துரக்க,அங்(கு) அதுபடத்
தொலைந்து சோர்கின்ற
அரக்கன்அவ் உரைஎடுத்(து)
அரற்றி னன்;அதற்(கு)
இரக்கமுற்(று) இரங்கலிர்;
இருத்திர் ஈண்(டு)’என்றான்.

[பகழி: அம்பு; பண்ணவன்: ராமன்; துரக்க: எய்ய; அங்கு அதுபட: அப்போது அது தைக்கவும்; அரக்கன் அவ்வுரை எடுத்து அரற்றினன்: மாரீசனான அரக்கன் அப்படிக் கூக்குரல் இட்டு அலறினன்; அவ்வளவுதான். ராமனது சத்தமே அல்ல அது. அதற்கு இரக்கமுற்று இரங்கலிர்: அந்தச் சத்தத்துக்காகக் கவலையுற்று வருந்த வேண்டாம்; இருத்திர் ஈண்டு என்றான்: இங்கேயே இருக்க வேண்டும் என்றான்.]

மிக்க ஆத்திரத்தோடு லக்ஷ்மணன் சொன்னான். சீதைக்கோ மனசில் படவில்லை அது. கோபந்தான் மூண்டது; தன்னைக் கொலைக்கு உள்ளாக்கின மாதிரிக் கஷ்டத்துக்கு உள்ளாகி விட்டாள்; உள்ளம் எப்படியெல்லாமோ கொதிக்க ஆரம்பித்து விட்டது.

என்றவன் இயம்பலும்
எடுத்த சீற்றத்தான்,
கொன்றன இன்னலன்,
கொதிக்கும் உள்ளத்தன்
‘நின்றநின் நிலைஇது
நெறியிற்(று) அன்(று)’என,-
வன்தறு கண்ணினன்
வயிர்த்துக் கூறுவான்.

[நின்ற நின் நிலை இது: லக்ஷ்மணா! ஒரு வருத்தமுமில்லாமல் நிற்கிறாயே, இந்த நிலையானது; நெறியிற்று அன்று: சன்மார்க்கத்தைச் சேர்ந்ததாக இல்லை என்று; வன்தறு கண்ணினள்: தாக்ஷிண்யம் சிறிதுமில்லாதவளாய்; வயிர்த்துக் கூறுவாள்: ஒரே அடியாய்ப் பகைத்துப் பேசுகிறாள்.]

“இராக் கஷ்டத்துக்கும் துயரத்துக்கும் அல்லவா ஆளாகி விட்டோம்?” என்று எண்ணிய மாத்திரத்தில் சீதையின் மனசு கருணை இல்லாது கடினம் அடைந்து வருகிறது என்பதைப் பார்க்கிறோம்.

# புயலும் அமைதியும்

பத்மா சேஷாத்ரி

ஜில்லா கலெக்டர் வேதாந்தாச்சாரி தம்முடைய ஆபீஸ் அறையில் உலாவியவாறு சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பாரத தேசத்தில் தேசிய இயக்கம் எங்கெங்கும் பரவி வந்த காலம். புதிதாகப் பதவி பெற்ற அவருடைய உற்சாகத்துக்கு ஓர் எல்லையே யில்லை. புருவங்களை நெரித்தார். "தேசிய இயக்கமாம்! எங்கே, என் ஜில்லாவில் வாலைக் காட்டட்டும்! ஒட்ட அறுத்துத் தள்ளி விடுகிறேன், பார்! இந்த வேதாந்தாச்சாரியை இன்னும் சரியாக அறிந்து கொள்ளவில்லை போலும்!" என்று யோசித்தவாறு, மேஜையின் மீதிருந்த மணியை அடித்தார். வெளியே பய பக்தியுடன் நின்று கொண்டிருந்த போலீஸ் இன்ஸ்பெக்டர்கள் பணிவுடன் உள்ளே நுழைந்தார்கள். கலெக்டர் அவர்களைப் பார்த்து, "மற்ற ஜில்லாக்களைப் போல் இயக்கத்தை வெகு தூரம் பரவ விட்டுவிட்டு முழிக்க வேண்டாம். இன்று சாயந்திரமே தேசிய வாதிகள் கூட்டம் கூடுவதாகச் செய்தி கிடைத்திருக்கிறது. தாட்சண்யம் பாராமல் குண்டாந்தடிகளை உபயோகித்துக் கூட்டத்தைச் சின்னாபின்ன மாக்குங்கள். அதற்கு மேலும் மீறினால் துப்பாக்கிப் பிரயோகம் செய்யவும் அஞ்சாதீர்கள். காரணத்துக்கு என்ன பஞ்சம்? உங்கள் போலீஸிலேயே சிலரைக் கூட்டத்தினுள் நுழையச் செய்யுங்கள். பிறகு கூட்டம் தாறுமாறாக நடக்க ஆரம்பித்து விடும். நீங்களும் உங்கள் அடக்குமுறையைத் தாராளமாக அவிழ்த்து விட்டுவிடலாம். இதோ உத்தரவு, முளையிலேயே வெட்டி எறிய வேண்டும், புரிந்ததா?" என்று கர்ஜித்தார். இன்ஸ்பெக்டர்களும் வீராப்புடன் 'ஸல்யூட்' அடித்துவிட்டுச் சென்றனர்.

வேதாந்தாச்சாரி அந்த நிமிஷமே தாம் நினைத்த காரியத்தைச் சாதித்து விட்ட பெருமையுடன் உள்ளே சென்றார். சகதர்மிணி தோலக்ஷ்மியிடம் தம் பிரதாபத்தை யளந்தார். "கெடு கெட்டவர்கள்; இதனாலெல்லாம் சுயராஜ்யம் கிடைத்து விடும் என்று எண்ணுகிறார்களே! வெள்ளைக்காரனுக்குத் தெரியாதா என்ன, சுய ஆட்சி கொடுக்கச் சமயம் எப்பொழுது என்று? எப்போது இவர்களுக்கு நிர்வகிக்க சக்தி வருகிறதோ, அப்போது தன்னால் கொடுக்கிறான். எங்கள் போலீஸ் முன் இவர்கள் எம்மாத்திரம்? தவிடு பொடிதான்! ஒரு போலீஸ் படையை எதிர்க்கத் துப்புக் கெட்டவர்கள் சுய ராஜ்யம் சம்பாதிக்கப் போகிறார்களாம்! சாகட்டும். வேண்டும், வேண்டும். அவரவர் வீட்டுக் காரியங்களைப் பார்த்துக் கொண்டு இருக்காமல் சர்க்கார் விஷயங்களில் தலையிட்டால்?" என்று நீண்டதொரு பிரசங்கம் செய்தார். அவள் மனதில் அவர் சொல்வது தவறு என்று பட்டாலும், சாதுவாதலால் வாயைத் திறக்கவில்லை.

அன்றிரவு ஒன்பது மணிக்கு இன்ஸ்பெக்டர்கள் மறுபடியும் கலெக்டரின் ஆபீஸ் அறையில் கூடினார்கள். ஜில்லா கலெக்டரின் ஆக்ஞை நிறைவேற்றப் பட்டதாகவும், இதை எதிர்பாராத கூட்டம் உடனே சிதறிப் போனதாகவும், அநேகம் பேர் அடி பட்டனர் என்றும் சொன்னார்கள். "இனிமேலாவது கூட்டம் கூடு முன் ஒரு தடவைக்கு இரண்டு தடவை யோசிப்பார்கள்" என்று கேலியாக மொழிந்தார் கலெக்டர் சாகேப்.

என்ன காரணத்தாலோ அவருக்கு அன்றிரவு சரியான தூக்கம் வரவில்லை. அடிபட்டு விழுந்ததாகச் சொன்ன ஜனங்களின் பற்பல உருவங்கள் அவர் மனக் கோட்டையை முற்றுகை யிட்டன. தூக்கமின்மையால் சிவந்த கண்களுடனும், காரணமற்ற கோபத்துடனும் காலையில் எழுந்தார்.

காலை மணி ஒன்பது. டவாலிச் சேவகன் ஒருவன் அன்றையத் தபால் கட்டுகளைக் கொண்டு வந்து மேஜைமீது வைத்தான். தபால்களைப் பார்வையிடும் நேரம்தான் அவருக்கு எல்லாவற்றிலும் பிடித்தது. ஏனென்றால் அவர் கண்மணி ராஜத்தின் அன்புக் கடிதங்கள் கிடைக்கும் நேரமல்லவா அது? அவருக்கு "ஒன்றே ஒன்று, கண்ணே கண்ணு!" என்று பிறந்தவள்தான் ராஜம். அவர் அவள்மீது உயிரையே வைத்திருந்தார் என்று சொல்லலாம். வெகு சீராக வளர்த்து, சிறப்புடன் கல்யாணம் செய்து கொடுத்தார். பெண் தன்னை விட்டுப் பிரியக் கூடாதென்ற

எண்ணத்துடன் வேண்டுமென்றே ஏழையான ரகுநாதனை மாப்பிள்ளையாக்கிக் கொண்டார். ரகுநாதன் பணக்காரனில்லையென்றாலும் அவனுக்குத் தன்மதிப்பும் சுயமரியாதையும் அதிகம் உண்டு. மாமனார் தம்முடன் வந்து இருக்கும்படி எவ்வளவோ அழைத்தும் வர மறுத்துத் தன் தாய்தந்தையருடனும், ராஜத்துடனும் சிறிது தூரத்தில் உள்ள ஒரு சிற்றூரில் வசித்து வந்தான். அந்த விஷயத்தில் மாத்திரம் அவருக்குச் சற்று மனத்தாங்கல்தான்; எனினும் தம் பெண்ணின் சுகத்தைக் கருதி சும்மா யிருந்தார். ராஜத்துக்கு இரண்டு வயதில் ஒரு குமாரன் இருந்தான். அவளுடைய கடிதங்களே வேதாந்தாச்சாரிக்கு உயிர் கொடுக்கும் அமுதம் எனலாம்.

தபால்களை யெல்லாம் அலட்சியமாகப் பார்வையிட்டு வந்த அவர் கண்ணில் ராஜத்தின் கையெழுத்திட்ட கவர் தென்பட்டது. முகத்தில் சந்தோஷம் தோன்ற கடிதத்தை வெகு ஆவலுடன் பிரித்தார். அவர் முகம் வெளிறியது; அவர் கண்களில் பீதி தோன்றியது; அந்தக் கடிதத்தில் இருந்ததாவது:

“என் பிரியமுள்ள அப்பாவுக்கு. க்ஷேமம்; க்ஷேமத்துக்கு எழுதவும். எங்கெங்கும் தேசீய இயக்கம் நடந்து வருகிறதல்லவா? உங்கள் மாப்பிள்ளைக்கும் தேசீய விஷயங்களில் பற்றுண்டு; எனினும் காரியத்தில் இதுவரை செய்து காண்பித்ததில்லை. நேற்றுத்தான் அவர் நண்பர்களுடன் தாமும் இயக்கத்தில் சேரப்போவதாகத் தீர்மானித்து விட்டார். நான் எவ்வளவோ சொல்லியும் கேட்கவில்லை. ‘ஆயிரக் கணக்கானவர்கள் சுகத்தையும் தியாகம் செய்யும்பொழுது, என்னுடைய சிறு சேவையைத் தடுக்காதே’ என்று சொல்லிவிட்டார். ஆனால் எனக்கு ஓர் ஆறுதல். தம் நண்பர்களுடன் அங்கேயே வருவதால் நீங்கள் பார்த்துக் கொள்வீர்கள் என்ற நம்பிக்கை. தவிர, மற்றவர்களைப் போல் நீங்கள் சுடுவதற்கும் ‘லத்தி சார்ஜு’ செய்வதற்கும் உத்தரவு போடமாட்டீர்கள் என்று என் உள்ளம் சொல்லுகிறது. எனினும் என் மனச் சாந்திக்காக அவரது க்ஷேமலாபங்களைத் தெரியப் படுத்திக் கொண்டிருங்கள். தாம் வந்தால் உங்கள் பெயருக்கு ஹானி வருமென்று அவர் அநேகமாக அகத்துக்கு வரமாட்டார்.

இப்பவும் குழந்தை கண்ணன் சௌக்கியம். தன் மழலை பாஷையில் நன்றாகப் பேசுகிறான். அம்மாவுக்கு என் நமஸ்காரங்கள்.

இப்படிக்கு,

ராஜம்.”

கடிதத்தைப் படித்து முடித்ததும் வேதாந்தாச்சாரி தலையில் பேரிடி விழுந்த மாதிரி உணர்ந்தார்.

இயக்கத்தில் அடிபட்டவர் அனந்தம்; ஆஸ்பத்திரியில் சென்று பார்த்தாலொழிய மனதுக்குத் திடம் ஏற்படாது. நடுங்கும் கைகளில் டெலிபோனை எடுத்துத் தான் வரப்போகும் செய்தியை ஆஸ்பத்திரிக்குத் தெரிவித்தார். சேவகனிடம், “டிரைவரைக் கார் கொண்டு வரச்சொல்!” என்றார். அவர் குரல் நடுங்கிற்று.

ஆஸ்பத்திரியில் ஒரே கலகலப்பு. “கலெக்டர் வரப் போகிறார்!” — “அடிபட்டவர்களைப் பார்க்க வருகிறார்!” என்றெல்லாம் கூறிக் கொண்டார்கள். நர்ஸுகள் பரபரப்பாக எல்லாவற்றையும் ஒழுங்குப் படுத்தி வைத்தனர்.

காரில் சென்ற கலெக்டரின் மனம் பலவாறு எண்ணித் தவித்தது. ஆஸ்பத்திரி வாயிலில் கார் நின்றது. கலெக்டர் காரிலிருந்து இறங்கினார். பெரிய டாக்டர் மரியாதையுடன் அவரை முதல் நாள் அடிபட்டவர்கள் படுத்திருந்த வார்டுக்குள் அழைத்துச் சென்றார். நோவு பொறுக்க மாட்டாமல் ஆற்றிக்கொண்டு படுத்திருந்தனர் பலர். கலெக்டரின் மனம் அடித்துக் கொண்டது. அந்தக் கட்டில்களில் எதிலாவது...? முதல் கட்டிலண்டை வந்தார். ஓர் இளைஞனுக்கு லத்தி அடியினால் எலும்பு



பிசகி யிருந்தது. நோவின் உபாதை சகிக்க முடியாமல் முனகிக் கொண்டிருந்தாலும் அவன் முகத்தில் ஜொலித்த தேஜஸ்தான் என்னே! கலெக்டர் அவனருகில் சென்றார். அவரது சுபாவமான அலக்ஷியத்துடன் "இவ்வளவு சிறு வயதில் உனக்கேனப்பா இந்த ஜோலி? வீணாய் அடி பட்டதுதான் மிச்சம். இனி மேலாவது புத்தியுடன் இரு!" என்றார்.

இளைஞனின் கண்கள் நெருப்பைக் கக்கின. "எனக்கு ஏனா இந்த ஜோலி? ஆஹா! என்ன விவேகம்! பாரதத் தாய் அடிமையாயிருக்கிறாள். அவளை விடுவிக்க வேண்டியது அவளுடைய புத்திரர்களான நம்முடைய ஜோலி யல்லாது வேறு யாருடைய ஜோலி?" என்றான் வீராவேசத்துடன். பலவீன நிலையில் இவ்வளவு பேசியதால் உடனே அதிர்ச்சி தாளாமல் அவன் மூர்ச்சை யடைந்தான். கலெக்டர் முகம் கன்றியது. பேசாமல் அப்பால் சென்றார்.

ஒவ்வொரு கட்டிலண்டை வரும் பொழுதும் அவர் இதயம் படபடக்கும். நெருங்கி, படுத்திருப்பவன் முகத்தைக் கண்டதும் அவரை யறியாமல் ஒரு பெருமூச்சு கிளம்பும். வார்டில் எல்லாப் படுக்கைகளையும் பார்த்தாயிற்று. கலெக்டர் மாப்பிள்ளை ரகு அங்கே இல்லை.

சிறிது ஆறுதலுடன் தலைமை டாக்டரை நோக்கி, "அவ்வளவுதானா?" என்றார். டாக்டர் சிறிது தயக்கத்துடன், "மிகவும் மோசமான நிலையிலிருக்கும் நான்கு பேர்களைத் தனியாகப் படுக்க வைத்திருக்கிறோம். அவர்கள் பிழைப்பார்கள் என்ற நம்பிக்கை யில்லை. தாங்கள் அங்கேயும்......" என்று சொல்லி நிறுத்தினார். ஆறுதலடைந்த மனம் மறுபடியும் நிலைகுலைந்தது. நெற்றியில் வியர்வை முத்துக்கள் அரும்பின. "இதோ வருகிறேன்" என்று ஈனஸ்வரத்தில் மொழிந்து டாக்டரைப் பின் தொடர்ந்தார். "ராஜம்! என் கண்மணி! அவன் க்ஷேமலாபங்களைத் தெரியப்படுத்தச் சொல்லி யிருக்கிறாயே! ஐயோ, இந்தப் பாவி உனக்கு என்ன செய்தி கொண்டு வரப் போகிறேனோ? என் கண்மணியை மஞ்சள் குங்குமத்துடன் இருக்க அருள்வாய், என் அப்பனே!" என்று பல பல எண்ணித் தவித்தது அவர் மனம்.



தனி வார்டுக்குள் நுழைந்தார். அவர் கால்கள் நடுங்கின. அவர் தம் நிலையை வெளிக் காட்டாமல் சமாளிப்பது வெகு கஷ்டமா யிருந்தது. வார்டில் பயங்கர நிசப்தம் குடி கொண்டிருந்தது. வலியைத் தாங்காமல் தவித்த ஜீவன்களுக்குச் சிறிது நேரம் சாந்தி யளிப்பதற்காகத் தூக்க மருந்தை உள்ளே செலுத்தி யிருந்தார்கள் டாக்டர்கள். வந்தவர்கள் தங்களை யறியாமல் குரல்களைத் தாழ்த்திக் கொண்டனர். "இப்படி வாருங்கள்!" என்று அழைத்தார் டாக்டர். கலெக்டர் அவருக்குப் பின்னால் சென்றார். முதல் கட்டிலை அடைந்தார். "ஆ, பகவானே! ரகு இல்லை!" என்று நினைத்தபோது, ஓர் ஆழ்ந்த பெருமூச்சு கிளம்பியது. இவ்வாறே இரண்டாவது மூன்றாவது கட்டில்களையும் மன நிம்மதியுடன் கடந்தாயிற்று. ஒரே ஒரு கட்டில்தான் பாக்கி. அவர் மார்பை ஒரு பெரும் பாரம் அழுத்தியது. கலெக்டரின் சப்த நாடிகளும் ஒடுங்கின. கண்கள் திறக்க மறுத்துத் தாமாகவே மூடிக்கொண்டன. நரக வேதனை யனுபவித்த ஒரு நிமிஷத்துக்குப் பின் வெகு கஷ்டத்துடன் கண்களைத் திறந்து கடைசி படுக்கையில் இருந்தவனையும் பார்த்தார். "என் கண்மணி ராஜம், பிழைத்துவிட்டாயம்மா!" என்கிற வார்த்தைகள் அவரை யறியாமல் வெளிப்பட்டன. மனதிலிருந்த பெரிய பாரம் நீங்கியது. ஆவேசம் வந்தவர் போல், "டாக்டரே! இந்தாருங்கள் செக். இந்த ஐயாயிரம் ரூபாயை வைத்துக் கொண்டு தேசிய இயக்கத்தில் அடி பட்டவர்களுக்கு ஒரு குறையும் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளுங்கள்!" என்று கூறி,

உணர்ச்சிப் பெருக்கில் நடுங்கும் கையால் ஒரு செக்கை ஒப்பமிட்டு டாக்டரிடம் கொடுத்தார். டாக்டரும் அதை நன்றியுடன் வாங்கிக் கொண்டு ஆஸ்பத்திரியின் சார்பாக வந்தன மொழிகள் கூறினார்.

கலெக்டருடைய கார் வீட்டை நோக்கிப் பறந்தது. போகும் வழியெல்லாம் கலெக்டர் மனதில் பெரிய போராட்டம் நடந்து கொண்டிருந்தது. குத்தும், அடியும், சிறைவாசமும் பாதிக்க முடியாத இந்த தேச பக்தியின் சக்திதான் என்னே! அவர் பார்த்த முகங்களில் ஒன்றிலாவது சோர்வு, தோல்வி, வெறுப்பு இவை இருக்க வேண்டுமே! கிடையவே கிடையாது! இன்னும் ஆயிரக்கணக்கான அடிகள் வாங்கவும் தயாராக இருந்தன அவர்களின் வீர உள்ளங்கள்! அந்த இளைஞனின் வீராவேசப் பேச்சு மீண்டும் அவர் காதில் ஒலித்தது. "அடிமைத் தளை!" — தான் தேசத்தின் அடிமைத் தளையை இறுக்கி அதிகரிக்கும் கருவிகளில் ஒன்றல்லவா?

மோட்டார் வீட்டை யடைந்ததும், "அப்பா!" என்று கூப்பிட்டவாறு, உள்ளேயிருந்து ஓடிவந்தான் ராஜம். கலெக்டர் மனம் வெதும்பியது. "ரகுவைப் பற்றிக் கேட்டால் என்ன பதில் சொல்லுவது?" என்று சஞ்சலப்பட்டுக் கொண்டே இறங்கினார். "அப்பா! என் கடிதாசியைப் பார்த்ததும் ரொம்ப சங்கடமாய் விட்டதா? அவர் ரயிலுக்குப் புறப்படுவதற்குக் கால் மணி முன்னர் குழந்தை கண்ணுக்குத் திடீரென்று வாய் பேத்தலும் ஜுரமும் வந்து எங்களைக் கலக்கிவிட்டது. அந்த ஊரில் நல்ல டாக்டர்கள் இல்லாததால் இங்கேயே குழந்தைக்கு மருந்து கொடுக்கலாம் என்று நேற்றிரவே ரயில் ஏறினோம். நீங்கள் வெளியே சென்ற பத்து நிமிஷங்களுக்கெல்லாம் நாங்களும் இங்கே வந்து விட்டோம்" என்றான்.

* * *

இரண்டு மாதங்களுக்கெல்லாம் தேசிய இயக்கத்தின் சம்பந்தமாகத் தம் கடமையைச் சரிவரச் செய்யத் தவறியதன் பொருட்டுக் கலெக்டர் வேதாந்தாச்சாரி வேறு ஜில்லாவுக்கு மாற்றப்பட்டதாகப் பத்திரிகைகளில் செய்தி வந்தது.

* ○ *

## ஆண்ட்ரூஸின் தயாளம்

தீனபந்து ஆண்ட்ரூஸின் தயாள குணத்தையும் இளகிய நெஞ்சத்தையும் விளக்குவதற்காகத் திருவாங்கூர் தேச பக்தராகிய ஸ்ரீ ஜி. ராமச்சந்திரன் தாம் எழுதிய ஒரு புத்தகத்தில் கீழ்க்கண்ட ஒரு ரஸமான சம்பவத்தைச் சொல்லுகிறார்:

ஒரு முறை ஒரு காங்கிரஸ் தொண்டர் சொந்தக் காரியமாகக் காந்திஜியைக் காணும் பொருட்டுச் சபர்மதி ஆசிரமத்துக்குப் போயிருந்தார். அங்கே அவர் நினைத்த காரியம் முடியவில்லை. காந்திஜி அவருக்கு உதவி செய்ய மறுத்தார். அந்தத் தொண்டர் மிக்க ஏமாற்றத்துடனும் கவலையுடனும் மறுநாள் ஊருக்குப் புறப்பட்டார். ஆனால் பாவம், அவர் கையில் பணம் இல்லை. ரயில் செலவுக்கு முப்பத்தைந்து ரூபாய் வேண்டும், அவர் என்ன செய்வார்?

இது தீனபந்து ஆண்ட்ரூஸுக்குத் தெரிந்தது. அவர் காந்திஜியிடம் சென்று, "அந்த முப்பத்தைந்து ரூபாயை நாம் கொடுத்தனுப்புவோம்" என்றார். ஆனால் காந்திஜியோ பிடிவாதமாக, "கூடாது. அவ்வளவு பணத்துக்கு நாம் எங்கே போவது? என்னிடமோ உங்களிடமோ சொந்தமாகத் தம்பிடிகூட இல்லையென்பது எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். இந்த மாதிரியான விஷயங்களுக்கெல்லாம் பொதுப் பணத்திலிருந்து எடுத்துக் கொடுப்பது சரியல்ல, நமக்கு உரிமையும் இல்லை. அவரிடம் பணம் இல்லையானால், கால் நடையாகவே நடந்து போகட்டுமே!" என்றார்.

ஒன்றிரண்டு மைல் அல்ல, நூற்றுக்கணக்கான மைல்களுக்கப்பால் இருந்தது அந்தத் தொண்டருடைய ஊர். அவர் கால் நடையாகச் செல்வதென்றால் எவ்வளவு சிரமம்?

ஆண்ட்ரூஸ் பதில் பேசவில்லை.

தொண்டர் ஊருக்குப் புறப்பட்டார். அவரை வழியனுப்புவதற்காக ஸ்டேஷன் வரையிலும் தீனபந்துவும் சென்றார். ஸ்டேஷனுக்குப் போனதும் தம்முடைய பையிலிருந்து முப்பத்தைந்து ரூபாயை எடுத்து அந்தத் தொண்டரிடம் கொடுத்து, "போய் வாரும்!" என்றார். தொண்டரும் அவரை வாழ்த்திக் கொண்டே ஊருக்குப் போனார்.

அவர் போனதும், ஆண்ட்ரூஸ் ஆசிரமத்துக்குத் திரும்பி வந்தார். வந்ததும் வராததுமாக நேராகக் காந்திஜியிடம் சென்று, "பாபு, ஒரு உண்மையைத் தங்களிடம் சொல்ல வேண்டும்" என்றார்.

காந்திஜி சிரித்துக் கொண்டே, "அந்த உண்மை எனக்குத் தெரியும்; நீங்கள் சொல்ல வேண்டாம். அந்த மனிதனுக்குப் பணத்தைக் கொடுத்து விட்டுத் தானே வந்தீர்கள்? உங்களைத் திருத்துவதற்குத்தான் யாராலும் முடியாதே!" என்றார். ஆண்ட்ரூஸும் சிரித்தார்.

# வட்டமேஜை

வந்தவாசி
12—1—47

கல்கி ஆசிரியர் அவர்களுக்கு,

சென்ற ஆண்டில் தமிழ் நாட்டில் காங்கிரஸ் கமிட்டிகளைக் கைப்பற்ற காங்கிரஸ் 'தியாகி'கள் பலரால் கையாளப்பட்ட முறைகளை யாரும் இவ்வளவு சீக்கிரத்தில் மறந்திருக்க மாட்டார்கள். மாகாணக் காங்கிரஸ் கமிட்டிக்கும் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக்கும் நடந்த தேர்தலில் சில 'தியாகி'கள் ஆயிரக்கணக்கான பணத்தைத் துர்விநியோகஞ் செய்து ஜெயித்ததாகச் சொல்லப்பட்டது. தேர்தல் பிரசாரமும் மிக விசித்திரமாக இருந்தது. பதவி மோகமே தங்களிடம் மருந்துக்குக்கூடக் கிடையாது என்றும் ஆனால் பதவி மோகக்காரர்களைத் தடுப்பதற்கே தாங்கள் போட்டி யிடுவதாகவும் சொன்னார்கள். சில இடங்களில் தங்களைத் தேர்ந்தெடுத்தால் சில செல்வாக்குள்ளவர்களை ஜில்லா போர்டு, யூனியன் போர்டு முதலியவைகளில் அங்கத்தினர்களாகக் கட்சியின் சார்பில் தேர்ந்தெடுக்கச் சௌகரியமாயிருக்கும் என்று மட்டும் இரகசியப் பிரசாரம் செய்தார்கள்.

சமீபத்தில் மீரத்தில் நடந்த காங்கிரஸும், அரசியல் முட்டுக் கட்டையைத் தீர்ப்பதற்கு டில்லியில் கூடிய முக்கியமான அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் கூட்டமும் மாகாணக் காங்கிரஸ் கமிட்டியிலும், அ. இ. கா. கமிட்டியிலும் உள்ள தமிழ் நாட்டுத் 'தியாகி'களின் வண்டவாளத்தை நன்கு காட்டி விட்டது. தமிழ் நாட்டிலிருந்து காங்கிரஸ் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட 250 மாகாணக் கமிட்டி அங்கத்தினரில் சுமார் 60 பேர்களே மீரத் காங்கிரஸுக்குப் போனார்களாம். அ. இ. கா. கமிட்டிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட தமிழ்நாட்டு அங்கத்தினர் 34 பேரில் ஜனவரி 5-ல் டில்லியில் நடந்த கூட்டத்துக்குப் பத்துப் பேர்தான் போயிருந்தார்களாம். இவர்களின் தேசபக்தியே தேச பக்தி! அரசியல் சூழ்நிலையை அனுசரித்து ராஷ்டிரபதி விடுத்த அறிக்கைக்குத் 'தியாகி'களாகிய இவர்கள் கொடுத்த கௌரவந்தான் என்னே! இப்படிக் காங்கிரஸுக்கும் முக்கியமான அ. இ. கா. கமிட்டி கூட்டங்களுக்கும் போக முடியாதவர்கள் எதற்காகக் காங்கிரஸ் பிரதிநிதிகளாகவும் அ. இ. கா. கமிட்டி அங்கத்தினராகவும் ஆகப் பெரு முயற்சி செய்கிறார்கள்? மற்றவர்களைப் பதவி மோகத்திலிருந்து காப்பாற்றுவதற்காகவா? அல்லது ஜில்லா போர்டு முனிஸிபாலிடி தேர்தல்களை உத்தேசித்தா?

தமிழ்நாடு என்றுதான் சுயநல மற்ற உண்மையான தேசபக்தத் தலைவர்களிடம் ஒப்படைக்கப்படுமோ தெரியவில்லை. என்றுதான் இந்த அரசியல் வியாபாரக் கூட்டத்தாரை நிராகரித்துத் தமிழ் மக்கள் உண்மையான தலைவர்களைத் தேர்ந்தெடுத்துத் தமிழ் நாட்டை விடுவிப்பார்களோ?

வி. கே. வேணு.

திருநெல்வேலி
11—1—47

கல்கி ஆசிரியர் அவர்களுக்கு,

நமது இந்தியா தேசம் சுதந்திர மாளிகையின் வாயிலிலிருந்து வெகு தூரத்துக்கப்பால் இருந்த சமயத்தில் நமது அரசியல் தலைவர்களில் சிலர் 'சுதந்திர இந்தியாவின் முதல் வேலை — மாணவர்களைப் பரீட்சை யென்னும் அரக்கனிடமிருந்து பாதுகாப்பது தான்' என்று கூறியதுண்டு.

இன்று நாம் கள்ளரக்கனின் தளையிலிருந்தும், தீண்டாமை யென்னும் அரக்கனின் பிடியிலின்றும் சிறிது சிறிதாக விடுபட்டுக் கொண்டிருக்கிறோம். லஞ்சப் பேயின் அணைப்பிலிருந்து விலகிக்கொள்ள முயன்று வருகிறோம். ஆனால், பரீட்சை யென்னும் குட்டிச்சாத்தான் கல்வியை நாடி வந்த மாணவர்களை ஆட்டி வைத்து வேடிக்கை பார்க்கும் கொடுமை இன்னும் ஒழியவில்லை. மெய் சோர்ந்து, கண் பஞ்சடைந்து, தள்ளாடிக் கொண்டிருக்கும் நம் மாணவர்களின் வருத்தம் என்றுதான் தீருமோ? கடவுளுக்கே வெளிச்சம்.

அமெரிக்காவிலும், பல மேல் நாடுகளிலும் மொத்த மாணவர்களில் தொண்ணூறு சதவிகிதம் தேர்ச்சி யடைகின்றனர் என அறிகின்றோம். நமது கலாசாலைகளிலோ 'பொறுக்கி யெடுத்த மாணவர்'களில் நூற்றுக்கு ஐம்பது சதவிகிதமே தேர்ச்சி யடைகின்றனர். என் இந்த வித்தியாசம்? படிப்பு என்றாலே பயப்படும் பாமரர்களுக்கு உற்சாகத்தைக் கொடுக்கவா இந்தக் கொடுமை?

மாணவர்கள் தங்கள் பள்ளிக்கூட வாழ்க்கையின் முதலிலிருந்து முடிவு வரை, பரீட்சை யென்னும் குட்டிச் சாத்தானுக்கு அடிமையாகவா காலத்தைக் கழிக்க வேண்டும்?

'யூனிவர்ஸிட்டி பரீட்சை' எழுதுவதற்கு முன்னால் 'பொறுக்கி யெடுக்கும் பரீட்சை' என்பதாக ஒன்று எதற்காகவோ தெரியவில்லை. புனிதமான கல்வி ஸ்தாபனங்களில் லஞ்சப் பேயின் தாண்டவத்தைத் தூண்டி விடும் இந்தக் கொடுமையை முதலில் ஒழிக்க வேண்டியது அவசியம்.

நமது கல்வி மந்திரி இந்த விஷயத்தைக் கொஞ்சம் கவனித்து, கூடிய சீக்கிரம் 'பொறுக்கி யெடுக்கும் பரீட்சை'யை ஒழித்து, எல்லா மாணவர்களும் 'யூனிவர்ஸிட்டி பரீட்சை' எழுதுவதற்கு வசதி செய்து கொடுப்பார் என நம்புகிறோம்.

என்றைக்குப் பரீட்சைக் கொடுமை ஒழிகிறதோ அன்றுதான் நமது மாணவர்களுக்குக் கதி மோட்சம். அன்றுதான் கலைமகளுக்கும் விடுதலை ஏற்படும்.

ஒரு மாணவன்.

# காணமற் போன மந்திரவாதி

ராஜி

ஓர் ஊரில் ஒரு மந்திரவாதி இருந்தான். அவனுக்குப் பெரிய தாடி உண்டு. அவன் ஒரு பெரிய கறுப்புப் பூனையை வளர்த்து வந்தான். மந்திரவாதி எங்கு போனாலும் அந்தக் கறுப்புப் பூனையும் அவனுடன் போவது வழக்கம். அவன் வெளியே போகும் பொழுதெல்லாம் மணி அடித்துக் கொண்டே போவான். அந்த மணியோசையைக் கேட்டவர்கள் மந்திரவாதிக்குப் பயந்து ஓடி ஒளிந்து கொள்ளுவார்கள். ஏனெனில் அவன் பார்ப்பதற்கே பயங்கரத் தோற்ற முடையவன். அதுவுமல்லாமல் அவன் தன்னைச் சந்திப்பவர்களிடமெல்லாம் ஏதாவது விடுகதைகள் சொல்லுவான். அதற்குப் பதில் சொல்லாவிட்டால் அவர்களை அடிமை யாக்கிக் கொண்டு விடுவான். எப்படியாவது அவன் ஊரை விட்டுத் தொலைந்தால் தேவலை என்று எல்லோரும் எண்ணினார்கள்.

ஒரு நாள் வழக்கம் போல் 'டிங்...டிங்...டிங்' என்று மணியோசை கேட்டது. மந்திரவாதி வருகிறான் என்பதைத் தெரிந்து கொண்டு எல்லோரும் பயந்து ஓடி ஒளிந்து கொண்டார்கள். ஆனால் கோபாலன் என்ற ஒரே ஒரு பையன் மட்டும் மந்திரவாதியைக் கண்டு பயந்து ஓடவில்லை.

அவனைப் பார்த்த மந்திரவாதி, "ஏ, கோபாலா! நான் சொல்லும் விடுகதைகளுக்கு நீ தக்க பதில் அளிக்க வேண்டும். இல்லா விட்டால் நீயும் எல்லோரையும்போல எனது அடிமையாக வேண்டும்" என்று கர்ஜித்தான்.

கோபாலன் சிரித்துக்கொண்டே, "உங்கள் விடுகதைகளுக்கு நான் பதில் சொல்லுகிறேன். ஆனால் நீங்கள் நான் சொல்லும் விடுகதைகளுக்கும் பதில் சொல்ல வேண்டும்!" என்றான்.










மந்திரவாதியும் 'சரி' என்று ஒப்புக் கொண்டு பின்வரும் விடுகதைகளுக்குக் கோபாலனைப் பதில் சொல்லச் சொன்னான்.

"மாமரத்தில் காய்த்த இஞ்சியைக் கொண்டு வந்து உன்னால் காண்பிக்க முடியுமா?"

"ஏழு மலைகளை ஒன்று சேர்த்து என் முன்னால் கொண்டு வந்து நிறுத்த முடியுமா?"

இதைக் கேட்ட கோபாலன், "இதோ, அரை நொடியில் வருகிறேன்!" என்று மந்திரவாதியிடம் சொல்லி விட்டு ஒரே ஓட்டமாய் ஓடினான். சிறிது நேரம் கழித்துத் தன்னுடன் நடுத்தர வயதுடைய ஒரு மனிதனை அழைத்துக் கொண்டு வந்து மந்திரவாதியின் முன்னால் நிறுத்தினான். மந்திரவாதிக்கு ஒன்றும் புரியவில்லை. அவன் மிகவும் கோபமடைந்து, "நான் கேட்ட கேள்விகளுக்குப் பதில் எங்கே?" என்று உறுமினான்.

"இதோ!" என்று தன் கையிலிருந்த இஞ்சியைக் காண்பித்து, "உங்க

னுடைய முதல் விடுகதைக்கு இதுதான் பதில்! என்றான்.

மந்திரவாதி, "இது என்ன இஞ்சி?" என்று கேட்டான்.

அதற்குக் கோபாலன், "இதுதான் மாமரத்தில் காய்த்த இஞ்சி!" என்று சற்றும் சளைக்காமல் பதில் சொன்னான்.

கோபாலனின் சாதுரியமான பதிலைக் கேட்ட மந்திரவாதி சந்தோஷமடைந்து, "ஏழு மலைகளை ஒன்று சேர்த்து என் முன்னால் கொண்டு வந்திருக்கிறாயா?" என்றுகேட்டான்.

"இதோ!" என்று தன்னுடன் அழைத்து வந்திருந்த மலிதனைக் கோபாலன் சுட்டிக் காட்டி, "இவன் தான் ஏழுமலை!" என்றான்.



பருத்தவர் :—என்ன, அண்ணாத்தே! இப்படி அடையாளம் தெரியாமல் இளைச்சுட்டே? நான் அப்பவே சொன்னேன். இந்த பெலூன் வியாபாரத்தில் இறங்காதேன்னு! ஊதி, ஊதி உடம்பிலிருக்கிற காத்தெல்லாம் போய்விட்டால் உடம்பு இப்படித் துரும்பாப் போகாமல் இருக்குமா?

மந்திரவாதி கோபாலனின் சாமர்த்தியத்துக்கு மெச்சி, "உன் பதிலை ஒப்புக் கொண்டேன். நீ எனக்கு அடிமை யில்லை; இனிமேல் நீ உன் கேள்விகளைக் கேள்!" என்றான்.

"நீங்கள் எனக்கு ரொம்ப ரொம்பச் சின்ன வஸ்து ஒன்றைக் காண்பிக்க வேண்டும். ஆனால் அந்த வஸ்து என்னைவிடப் பெரியதொரு வஸ்துவை உள்ளே வைத்திருக்க வேண்டும்!" என்றான் கோபாலன்.

உடனே மந்திரவாதி "உன் வலது கையை நீட்டு! நானே நீ கேட்கும் சிறிய வஸ்துவாக மாறி, உனக்குத் தெரியாமல் உன் கைக்குள் நுழைந்து விடுகிறேன்!" என்றான்.

அவ்வளவுதான்; அடுத்த நிமிஷமே மந்திரவாதியைக் காணவில்லை. அவனுக்குப் பதிலாகக் கோபாலனின் நீட்டிய கையில் ஒரு சிறிய ஆலம் விதை இருந்தது. அந்த ஆலம் விதை மறுபடியும் மந்திரவாதியாக மாறி விட்டது!

கோபாலன், "நீங்கள் காட்டிய சிறிய ஆலம் விதையில்தான் பெரிய ஆலமரம் இருக்கிறது. உங்கள் பதிலை நான் ஒப்புக் கொள்கிறேன். என்னுடைய இரண்டாவது கேள்விக்குப் பதில் சொல்லுங்கள்: ஒரு தப்புச் செய்யாவிட்டாலும் ஸ்திரீகளால் அப்படியும் இப்படியுமாக ஆட்டி வைக்கப்படும் வஸ்து எது?" என்று கேட்டான்.

"ஸ்திரீகள் மத்தினால் தயிர் கடையும்போது, அதனுடன் இருக்கும் வெண்ணெய்தான் இப்படியும் அப்படியுமாக ஆட்டி வைக்கப் படுகிறது!" என்று சொல்லிக்கொண்டே மந்திரவாதி வெண்ணெயாக மாறினான். அந்த வெண்ணெயைப் பார்த்த மந்திரவாதியின் கறுப்புப் பூனை 'தடால்' என்று பாய்ந்து அதைத் தின்ன ஆரம்பித்து விட்டது!

"நான் மறுபடியும் மந்திரவாதியாக வேண்டும். என்னைத் தின்னாதே!" என்ற குரல் அந்த வெண்ணெயிலிருந்து எத்தனையோ முறை வந்தும் கறுப்புப் பூனை கேட்கவே யில்லை. எல்லாவற்றையும் அரை நொடியில் தன் வயிற்றுக்குள் தள்ளிவிட்டது. பாவம், மந்திரவாதி தான் அருமையாக வளர்த்து வந்த பூனையின் வயிற்றுக்குள்ளேயே கடைசியில் அந்தர்த்தியானமாகி விட்டான்!













முன்னே யெல்லாம் "படித்துக் கிழிச்சுட்டான்!" என்பார்கள். இப்போதெல்லாம் பத்திரிகைக்கு ஏற்பட்டிருக்கும் கிராக்கியினால் கிழிச்சுப் படிக்கிறார்கள்.

# ஒரு ப்ரதிக்ஞை நிறைவேற்றப்பட்டது!

எமது முந்தின அறிவிப்புக்கிசைய, மலிவான விலையிலுள்ள பீப்பிள்ஸ் ஸெட் இப்பொழுது மெஸ்ஸர்ஸ். பலஸ்பாய் லிமிடெட் என்பவர்களிடம் கிடைக்கும். விலை ரூ. 95/- தான். சிறிய வருமான முடையவர்களின் தேவைகளைக் கவனிப்பதே எமது முக்கிய உத்தேசமாதலால், மிகக் குறைவான விலைக்கு கூடுமானதும் அதிக திருப்தி யளித்து வர நாங்கள் விடாது முயற்சிப்போம்.

## 'தி பீப்பிள்ஸ் ஸெட்'



### கவர்ச்சிகரமான அம்சங்கள்

1. சிறிய வருவாய்க்காரர்களின் சக்திக்குகந்தாற்போல் மலிவான விலை.
2. அதிகப்படியான உழைப்பு.
3. சுளுவாக வேலை செய்விக்கலாம்.
4. குறைந்த கரண்டு செலவு.
5. வாயுமண்டல சம்பந்தமான தொந்தரவே கிடையாது.
6. கிராமபோன் ஆம்ப்ளிபையராகவும் வேலை செய்கிறது.

**தி நாஷனல் ரேடியோ & எஞ்ஜினீயரிங் கோ., லிட்.**

வினியோகஸ்தர்கள் — மெஸ்ஸர்ஸ் பலஸ்பாய் லிமிடெட்.

# இரு நண்பர்கள்

ஆசிரியர்: சுதர்சன் மொழிபெயர்ப்பு: ரா. வீழிநாதன்

## ரூபராணி சொல்லுகிறாள்:

### 6. பணம் என்னத்திற்கு?

உண்மையில் இருவருக்கும் எத்தனையோ வித்தியாசம் இருக்கிறது. நந்தகிசோர் உற்றுப் பார்க்கும்பொழுதெல்லாம் தானும் எரிந்து பிறரையும் எரித்து விடுபவன்போல் பார்க்கிறான். வித்யாசங்கரின் பார்வையில் உள்ளத்தைக் குளிரச் செய்யும் அமிருத கலசம் இருப்பது போன்ற ஓர் உணர்ச்சி உண்டாகிறது. ஒருவனிடத்தில் மிருகத் தன்மை மலிந்து கிடக்கிறது; மற்றவனிடத்தில் மனுஷ்யத் தன்மை பொதிந்திருக்கிறது. ஒருவனிடத்தில் கயாலம்; மற்றவனிடத்தில் அன்பு குடிகொண்டிருக்கிறது.

ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் நந்தகிசோர் வித்யாசங்கரைக் காட்டிலும் மேலானவன்தான். அவனுக்கு ஏராளமான சொத்து இருக்கிறது. வித்யாசங்கரோ பரம ஏழை! அவருடைய தாயார் கூலி வேலை செய்து வயிறு வளர்க்கிறாள். அதிலேயே அவரைப் படிக்கவும் வைக்கிறாள். படிப்பில் வித்யாசங்கரின் கால் தூசுகூடப் பெறமாட்டான் நந்தகிசோர்! வித்யாசங்கர் சொல்லிக் கொடுத்திராவிட்டால் நந்தகிசோர் 'மெட்ரிக்'கில் தேறுவது எது? வித்யாசங்கர் மாகாணத்துக்கே முதலாவதாகத் தேறினவர். அன்றைக்கு ஒரு நாள் அவருடைய கட்டுரை ஒன்றைப் படித்துவிட்டுப் புரொபஸரே ஆச்சரியப்பட்டுப் போய்விட்டார். போன மாதத்து 'கிரேட்டர் இந்தியா'வில் வெளிவந்த அவருடைய கவிதை எவ்வளவு அருமையாக — பாவம் பொருந்தியதாக இருந்தது! எந்த விஷயத்தை எடுத்துக் கொண்டாலும் அவர்தான் முதன்மையாக இருக்கிறார். அவரை மிஞ்சிவிட எவராலுமே முடியவில்லை. பி. ஏ. வகுப்பிலும் அவர்தான் முதன்மையாகத் தேறுவார் என்பதில் யாருக்குமே சந்தேகமில்லை. இப்படிப்பட்டவரைக் கை நழுவவிட யாருக்குத்தான் மனம் வரும்? நல்லவேளை! நந்தகிசோரின் அப்பா வந்து கேட்டபொழுது, "அதெல்லாம் முடியாது!" என்று அப்பா தீர்மானமாக மறுத்து விட்டார். இல்லாவிட்டால் என் வாழ்க்கை வீணாக வேண்டியதுதானே? பணத்துக் கென்ன? கெட்டிக்கார மனுஷ்யர்; வேண்டுமளவு சம்பாதித்து விடுவார். என்ன தங்கமான குணம்! காலேஜில் — ஊரில் எங்கே பார்த்தாலும் அவருடைய புத்திசாலித்தனத்தைப் புகழாதவரில்லை. ஏழைமை என்னும் சேற்றில் உழன்ற பொழுதிலும் வைரம் போல் அல்லவா அவர் பிரகாசிக்கிறார்! அப்படிப்பட்டவர் எப்பொழுதுமே இந்த ஏழைமைச் சேற்றில் உழன்று கொண்டிருப்பாரா, என்ன?

இரண்டு பேரும் ரொம்ப ரொம்ப சிநேகிதமாக இருந்தவர்களாம் — பாலும் தண்ணீரும் போல. ஆனால் காலேஜில் சேர்ந்தது முதல் இருவருக்கும் கொஞ்சம் உள்ளூற மனஸ்தாபம்போலிருக்கிறது. பாவம், அவர் ஒன்றுமே வாய் திறப்பதில்லை. ஆனால் இந்த நந்தகிசோர் அவரை மட்டம் தட்ட வேண்டுமென்று நினைக்கிறான். அன்றைக்கு ஒரு நாள் சில பையன்களிடம், "நான் பணம் கொடுத்து, புஸ்தகம், துணிமணி வாங்கிக் கொடுத்து ஒத்தாசை செய்யவில்லை என்றால் இவன் பரீக்ஷையில் உட்காருவது எங்கே? இப்பொழுது என்னடா வென்றால் என்னிடமே தன் வாலை ஆட்டுகிறான்! இவனுடைய நிலைமை ஊராருக்குத் தெரியாதா, என்ன? இவனுடைய அம்மா வீட்டுக்கு வீடு வேலை செய்து வயிறு கழுவுகிறவள்தானே!" என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

# அட ராமா!



"என்னடா சுந்து, சட்டை ரொம்பப் பெரிசா இருக்கிறதே; ஞாபகமறதியாய் உன் அண்ணன் சட்டையைப் போட்டுக் கொண்டு விட்டாயா?"

"இல்லே மாமா, இது உங்களுடைய சட்டை! நீங்கள் என் சட்டையை ஞாபக மறதியாகப் போட்டுக் கொண்டு விட்டீர்கள்!"

---

அந்தச் சமயம் நான் அந்த வழியே போய்க் கொண்டிருந்தேன். என் காதுகளிலும் இந்த வார்த்தைகள் விழுந்தன. எனக்கு அவன்மீது கோபம் கோபமாக வந்தது. 'இவனுடைய வண்டவாளங்களைக் கொட்டி நாமும் இவனை மட்டம் தட்டினால் என்ன?' என்றுகூட எண்ணினேன். ஆனால் வெகு சிரமப்பட்டு மனதை அடக்கிக் கொண்டேன். இருந்தாலும் "அவர் உங்களுக்கு ஒத்தாசை செய்திரா விட்டால் — வெகு பாடு பட்டு உங்களுக்கு அவர் சொல்லித் தராமல் இருந்திருந்தால் — எவ்வளவு வருஷம் உட்கார்ந்தாலும் நீங்கள் 'எண்ட்ரென்ஸ்' பரீக்ஷையில் பாஸ் செய்து விட முடியும் என்று நினைக்கிறீர்கள்? வாங்கின புஸ்தகங்களை அலங்காரமாக அலமாரியில் வேண்டுமானால் அடுக்கி வைத்திருக்கலாமே தவிர உங்களால் பரீக்ஷையில் தேறியிருக்க முடியாதாக்கும்! அவர் செய்த உதவியை மறந்து இப்படிப் பேசுவது கொஞ்சங்கூட நன்றாயில்லை. அவர் ஒன்றும் உங்களைப் போல் பணம் காசை லக்ஷியம் செய்கிறவரில்லை, தெரியுமா?" என்று கேட்டு விட்டேன். இந்த வார்த்தைகளைக் கேட்டு அவனுடைய முகம் போன போக்கைச் சொல்லி முடியாது.

இப்பொழுதுதான் நடந்த விஷயம். நந்தகிசோர் தன் வகுப்பு மாணவர்களுக்கெல்லாம் ஒரு தேநீர் விருந்து அளித்தான். அதற்கு அவனை மட்டும் அழைக்கவில்லை. "பிறருக்கு டீ பார்ட்டி கொடுக்கக் கையால் ஆகாதவன் பிறர் கொடுக்கும் 'பார்ட்டி'யில் கலந்து கொள்வானேன்? அதனால்தான் நான் அவனை அழைக்கவில்லை!" என்று அவன் அதற்கும் ஒரு காரணம் கற்பித்துக் கூறினான். அதுவும் குறிப்பாக, என் காதில் விழும்படியாக. இந்தக் கையாலாகாத்தனத்தினால் நான் வித்யாசங்கரை மட்டமாக எண்ணுவேன் என்று எண்ணி அப்படிச் சொன்னானோ, என்னவோ! ஆனால், அதற்கு மாறாக வித்யாசங்கரின் மீதுள்ள பற்றுதல் இன்னும் அதிகரித்ததே யொழியக் குறையவில்லை. நந்தகிசோரிடம் நான் கொஞ்ச நஞ்சம் காட்டிவந்த மரியாதை தான் குறைந்தது. 'பணத் திமிரில் கைகால் தெரியாமல் மிதந்து கிடப்பவன் ஒரு மனிதனா?' என்று தோன்றியது எனக்கு. என்னை அவன் 'பார்ட்டி'க்கு அழைக்க வந்த பொழுது, "தன் வகுப்பு மாணவனைப் பகிரங்கமாக அவமானப்படுத்த விரும்பும் உன்னுடைய 'டீ பார்ட்டி'யில் நான் கலந்து கொள்ள முடியாது!' என்று மறுதளித்து விட்டேன். மற்ற மாணவர்களும் இந்த விஷயத்தில் என்னை ஆமோதித்தனர். அவன் பதில் சொல்லத் தெரியாமல் விழித்தான். அவனை அவமானப் படுத்த எண்ணிய அவனே அவமானப்பட்டுத் தலைகுனியும்படி ஆகிவிட்டது.

## 7. ஏன் இந்த மாறுதல்?

நானும் பார்த்துக்கொண்டுதான் வருகிறேன், சில தினங்களாக. அவரிடம் ஏதோ ஒருவித மாறுதல் ஏற்பட்டிருப்பது போலப் படுகிறது எனக்கு. அந்தப் பழைய இன்மொழியையும், காதல் வீசும் பார்வையையும் இப்பொழுதெல்லாம் காண முடியவில்லை. என் திடீரென்று இப்படி மாறிவிட்டாரோ, எனக்குப் புரியவில்லை.

"நீதான் அவரைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. அவர் ஒன்றும் மாறவே இல்லை!" என்று எண்ணி என் மனதை எவ்வளவோ சமாதானப்படுத்த முயலுகிறேன். ஆனால் மனம் கேட்டால்தானே?

அன்றைக்கு ஒரு நாள், "இந்தக் கணக்குகளெல்லாம் எனக்குப் போட வரவில்லை.

சற்றுச் சொல்லித் தாருங்கள்!" என்று கேட்டேன்.

"உன் புரொபஸரைக் கேட்டுத் தெரிந்து கொள்வதுதானே?" என்றார்.

அவர் இப்படிப் பதில் சொல்லுவார் என்று நான் எதிர்பார்க்கவேயில்லை. இந்தப் பதில் என் மனதுக்கு மிகவும் வருத்தத்தை உண்டு பண்ணியது. அவர் இதை ஒரு பொருட்டாகவே மதிக்கவில்லை. அப்புறம் என்றைக்கோ ஒரு நாள், "இன்றைக்கு நல்ல படம் ஒன்று வந்திருக்கிறதாம் போய் விட்டு வருவோமே!" என்று கூப்பிட்டேன். "மன்னிக்கணும்; எனக்கு வரச் சௌகரியமில்லை. நீ மட்டும் போய்விட்டு வா!" என்று சொன்னார். "நான் தனியாக எப்படிப் போவது?" என்று கேட்டேன். "நந்தகிசோரை அழைத்துக்கொண்டு போயேன்!" என்று பதில் அளித்தார். நான் இதற்கென்ன பதில் சொல்வது? என் கண்களில் கண்ணீர் பொங்கி என் மன வருத்தத்தை அவருக்கு உணர்த்த முயன்றது. ஆனால் அந்தக் கல் நெஞ்சருக்குக் கொஞ்சம்கூட என்மீது இரக்கம் ஏற்படவில்லை.

ஒரு நாள் அவருக்கு உடம்பு சரியில்லை. அதனால் அவர் காலேஜுக்கே வரவில்லை. என் மனம் பதைத்தது. காலேஜ் விடும் வரையில் பித்துப் பிடித்தவன்போல் இருந்தேன். காலேஜ் விட்டதும் நேரே அவருடைய வீட்டை அடைந்தேன். கட்டிலில் படுத்து முனகிக்கொண்டிருந்தார். நான் உள்ளே போய்ச் சிறிது நேரம் நின்றபடியே அவரைப் பார்த்துக்கொண்டிருந்தேன். அவர் என்னைப் பார்த்த பின்னரும், "வா, உட்காரு!" என்று ஒரு உபசார வார்த்தை கூடச் சொல்லவில்லை. இருந்தாலும் அவர் சொல்வதை எதிர்பாராமல் நான் உட்கார்ந்தேன். சிறிது நேரம் கழித்து நானாக, "உங்களுக்கு உடம்பு சரியில்லையென்று கேள்விப்பட்டேன்; பார்த்துவிட்டுப் போகலாமென்று வந்தேன். இப்பொழுது எப்படி இருக்கிறது?" என்று கேட்டு வைத்தேன்.

அவர் மெதுவாகக் கண்களைத் திறந்து வேண்டா வெறுப்புடன், "கொஞ்சம் தேவலை!" என்றார்.

நான் அவருடைய நெற்றியில் கையை வைத்துப் பார்த்தவண்ணம், "ஏதாவது மருந்து சாப்பிட்டீர்களா? டாக்டர் யார்? என்ன சொல்லுகிறார்?" என்று கேட்டேன்.

"டாக்டர் யாரா யிருந்தால் என்ன? இப்போது நான் 'குயினைன்' சாப்பிட்டிருக்கிறேன்; நாளைக்குள் கொஞ்சம் இறங்கி வரும் என்று எண்ணுகிறேன்."

"ஆகாரம் என்ன சாப்பிட்டீர்கள்?"

"ஒன்றுமில்லை."

"பாலாவது சாப்பிட்டீர்களோ?"



"அதுவும் இல்லை!"

"இப்படி ஆகாரமே சாப்பிடாமல் இருந்தால் உடம்பு ரொம்பக் களைத்துப் போய் விடுமே!"

"ஆகாரமில்லாமல் உடம்பு ஒன்றும் களைத்துப் போய்விடாது; ரொம்பப் பேசினால்தான் களைத்துப் போய்விடும்" என்றார் அவர்.

என் உள்ளத்தில் ஒரு கூரிய கத்தியினால் குத்தியிருந்தால்கூட எனக்கு அவ்வளவு வேதனை ஏற்பட்டிராது; உண்மையில் அவர் சொன்ன அந்த வார்த்தை என் மனதை ரொம்பவும் புண்படுத்தி விட்டது.

"உங்களை நான் ஒருத்தி பார்க்க வந்தேனே! என் புத்தியைத்தான் செருப்பால் அடிக்க வேண்டும்!" என்று கோபத்துடனும் படபடப்புடனும் சொன்னேன்.

அவர் வெகு அலட்சியமாகத் தம் முகத்தைத் திருப்பிக் கொண்டு, "உன்னை 'வா, வா' என்று நான் வருந்தி அழைத்தேனா, இல்லையே? இப்போதே வேண்டுமானாலும் போ!" என்றார்.

நான் ஆத்திரத்துடன் எழுந்து நின்றேன். அவரைப் பார்க்கவே எனக்குப் பிடிக்கவில்லை. "இனிமேல் வருவதென்றால் உங்களுடைய உத்தரவின்றி வரக் கூடாதோ, இல்லையோ?" என்று கேட்டேன்.

அவர் சுவரைப் பார்த்த வண்ணமே, "இதற்கெல்லாம் பதில் சொல்ல நான் ஆளில்லை. நீ உன் மனத்தினிடமே கேட்டுக் கொள்!" என்றார்.

"என் மனம் சரியாகத்தான் இருக்கிறது; உங்கள் மனம்தான் மாறிவிட்டது?" என்றேன்.

"நானோ ஏழை! ஏழைகளுக்கு மனது என்று ஒன்று இருக்கிறதா?" என்றார் அவர் கிண்டலாக.

"இன்றைக்கு என்ன, நீங்கள் சண்டைக்கு என்றே வரிந்து கட்டிக் கொண்டு பேசுகிறீர்களா?"

"என்னைப் போன்ற துராத்மாவிடம் இதைத் தவிர வேறென்ன எதிர்பார்க்க முடியும்?"

நான் கோபம் தணியாமல் புறப்பட ஆயத்தமானேன். 'மனிதனுக்கு ஞானம் வந்தால் கூடவே சிடுசிடுப்பு ஏற்படுவதும் இயற்கை. இவர் மீது குற்றமில்லை. இதெல்லாம் ஞானம் செய்யும் வேலை!' என்ற நினைவு திடீரென எனக்கு உதித்தது. உடனே என் கோபமெல்லாம் மாயமாய் மறைந்தது. நான் மறுபடியும் நாற்காலியில் உட்கார்ந்தேன். அவருடைய முகத்தை மெதுவாகத் திருப்பி அன்பு கலந்த கோபத்துடன், "இன்றைக்கு ஏன் இப்படி எதற்கெடுத்தாலும் குதர்க்கமாகப் பேசுகிறீர்கள்? என்மேல் ஏதாவது கோபமா?" என்று கேட்டேன்.

அவருடைய கண்கள் கலங்கின. அவரையறியாமலே அவருக்கு அழுகை வந்து விட்டது. என்னிடம் பேசின பேச்சுக்காக அவர் வருந்துகிறார் என்பதை உணர்ந்தேன். என்னைப் பார்க்கவே அவருக்குத் துணிவு ஏற்படவில்லை. கோபத்தை வேண்டுமானால் யாருமே எதிர்க்கலாம். அன்பை எதிர்ப்பதென்பது முடிகிற காரியமா? அவருடைய கண்ணீரைக் கண்டதும் என் மனம் இளகி விட்டது. அந்தக் கண்ணீர் 'நான் வெற்றி கொண்டேன்' என்பதற்குப் பிரத்தியக்ஷப் பிரமாணம் அல்லவா? ஆகவே என் மனம் உள்ளூறக் குதூகலம் அடைந்தது.

சிறிது நேரம் கழித்து வேண்டா வெறுப்புடன், "யாராவது பார்த்தால் ஏதாவது சொல்வார்கள். நீ போய்விடு!" என்றார்.

அவர் என் கையை அன்புடன் பற்றித் தன் மார்பில் வைத்துக் கொண்டு விசிக்கலானார். அவரால் வாய் திறந்து ஒரு வார்த்தைகூடப் பேச முடியவில்லை.

"யார் ஏது வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளட்டும். நான் பொருட்படுத்தினால் தானே?"

அவர் திரும்பிப் படுத்த வண்ணம், "நீ பொருட் படுத்தாமல் இருக்கலாம். உன்னைப் போலவே நானும் இருக்க வேண்டாமா?" என்றார்.

"இவர் ஏன் இப்படிப் பேசுகிறார்? இவருடைய மனம் மாறிவிட்டதா?" என்ற சிக்கலான பிரச்னை யெழுந்து என் மனத்துக்கு மிகவும் துயரத்தை அளித்தது. 'பச்சைப் பசேல்' என்று இருந்த பூங்காவில் ஏன் தான் இப்படித் தீ பிடித்ததோ?

(தொடரும்)

# கண் காட்சியில் கண்டவை

குழந்தைக்கு ஆறுவயது. பெயர் முத்து. ஒலி பரப்பி நிலயத்தில் வைத்திருதோம் காணமற் போய் விட்டான்-கண்டு பிடித்துக் கொடுக்கவும்.

















"என் ஸார், அவர் முகம் என் அப்படி விளக் கெண்ணெய் சாப்பிட்டமாதிரி இருக்கிறது?"
"அதுவா? பிஸ்கட் கடைக்காரர் ஞாபக மறதியாகத் தம்முடைய கடைப் பிஸ்கட்டைத் தாமே சாப்பிட்டு விட்டுத் தவிக்கிறார்!"



சென்னைக் காங்கிரஸ் கட்டிட மைதானத்தில் சுதேசிப் பொருட் காட்சி நடந்து வருகிறது. ஆயிரக் கணக்கான ஜனங்கள் தினந்தோறும் வந்து கண்டு களித்துச் செல்கிறார்கள்.

# அமுத கீதம்

சாம் ராஜ்

என் மாமாவின் பெண் சுமதி எங்கள் வீட்டிலேயே இருந்தாள். என் மாமாவும், தந்தையும் கூட்டு வியாபாரம் செய்து வந்தார்கள். ஒரே வீட்டில் இரண்டு பெரிய குடும்பம். அதைவிட ஒற்றுமையாக நானும் சுமதியும் பழகி வந்தோம்.

சிறு வயதிலேயே சுமதிக்குச் சங்கீதத்தில் ரொம்பவும் பிரியம். யாராவது பாடினால் அதைப் போலவே பாடிப் பார்ப்பாள்.

வீணையின் தந்தியை மீட்டி உள்ளம் உருகும் இசை ஒலியை எழுப்புவதில் அதிக ஆசை எனக்கு. சுமதியும் நாளடைவில் வாய்ப்பாட்டுப் பாடக் கற்றுக் கொண்டாள். நான் வீணை வாசிக்கக் கற்றுக் கொண்டேன். கலையிலுள்ள ஆர்வத்தினால் சங்கீத ஞானம் அதிகரித்து, நல்ல தேர்ச்சியையும் கொடுத்தது.

எங்கள் ஊருக்குக் கோடியில் ஒரு சிற்றாறு, மலைக் குன்றுகளை அரித்துக் கொண்டு ஓடுகிறது. அந்த ஆற்றின் அழகில் ஒரு தெய்விக சக்தி இருக்கது.

ஒரு நாள் மாலை அந்த அழகிய ஆற்றை நோக்கி நாங்கள் நடந்தோம். இயற்கையின் அழகு சுமதியின் அழகுடன் போட்டியிட்டது. கருமேகங்கள் வானத்தில் உருண்டோடின. ஒரு குன்றிலிருந்து மற்றொரு குன்றுக்குப் பாய்ந்து செல்லும் அந்த ஆற்றின் 'ஓ' என்ற சத்தம் எங்களைக் கண்டு கவிநடனம் புரிவதுபோல் தோன்றியது. குன்றின் மீது மோதிக் கொண்டிருந்த அலைகள் என் இப்படித் துள்ளிக் குதிக்கின்றன? 'ஓ' என்ற கீதத்தைக் கேட்டதினலா என்று தோன்றும்.

குன்றின் மேல் உட்கார்ந்தபடி சுமதி காலை நீட்டினாள். அலைகள் அவள் கால்களில் மோதின. அவ்வாறு அது மோதியது "நீ ஒரு பாட்டுப் பாடேன்!" என்று அவளைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்வது போல் இருந்தது!

"அத்தான்! நீங்கள் மட்டும் வீணையைக் கொண்டு வந்திருந்தால் இந்த அலைகளின் விருப்பத்தை நிறைவேற்றியே இருப்பேன்!" என்றாள் சுமதி.

"இப்பொழுது மட்டும் என்ன முழுகிப் போய்விட்டது? வீணை யில்லாவிட்டால் கூட உன்னுடைய பாட்டு சோபிக்குமே!" என்றேன். அவ்வளவுதான்! அவள்,

"வீணையடி நான் உனக்கு;
மேவும் விரல் நீ எனக்கு!"

என்று உடனே பாட ஆரம்பித்து விட்டாள்.

மறுகணம் தாவித் தாவிச் சென்ற நீரலையின் தாளத்துக்கேற்ப சுமதியின் பாட்டு காற்றலையில் மிதந்து சென்றது.

★

இவ்வாறு நாங்கள் எத்தனையோ நாட்களைக் கழித்திருக்கிறோம்; எங்கள் வருங்காலத்தைப் பற்றி என்ன வெல்லாமோ எண்ணி இறுமாந்திருக்கிறோம். ஆனால், காலதேவன் எங்கள் விஷயத்தில் அவ்வளவு கடுமையாக நடந்து கொள்வான் என்று நாங்கள் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை.

இருந்தாற் போலிருந்து எங்கிருந்தோ என்னைத் தேடி வைசூரி வந்தது. மிகவும் கஷ்டப்பட்டேன். அதன் விளைவாக என்னுடைய கண்களை இழந்தேன்.

இயற்கையின் எழிலை இனி என்னால் அநுபவிக்க முடியாது; சுமதியின் அழகிய கண்களின் அர்த்த புஷ்டியான பார்வையை இனி என்னால் பார்க்க முடியாது; அந்த மலைக்குன்றுகள், அதற்கு இடையே ஓடும் ஆறு—எல்லாம் இனி என் கண்களுக்குப் பாழ் வெளிதான்!

இனி உலகத்தில் எனக்கு ஒன்றுமே இல்லை. வீணையின் நாதத்திலிருந்து எழும் அந்தப் பாட்டு என் மனக்கண் முன் சுமதியின் உருவத்தைக் கொண்டு வந்து நிறுத்தும். ஆனால், உண்மை சுமதியை?—நினைக்கும்போதே நெஞ்சைப் பிளந்தது.

அன்று சுமதி சொன்னாள்:—"ரோஜா மலர் அழகுடன் மட்டுமின்றி மணத்துடனும் இருக்கிறது!" என்று. ஆனால் இன்று அதில் முள் வேறு முளைத்து விட்டதே! அதை அவளால் ஸ்பரிசிக்க முடியுமா?

இப்படி யெல்லாம் நான் எண்ணிக் கொண்டிருந்தபோது, சுமதி வரும் காலடிச் சத்தம் கேட்டது. "அத்தான்!" என்று அலறும் குரலில் அவள் என்னை அழைத்

துக்கொண்டே ஓடி வந்தான். நான் முகத்தை மூடிக்கொண்டேன். 'தொப்' என்று மண்டியிட்டு என் எதிரில் உட்கார்ந்தான். என்னுடைய இரண்டு கால்களையும் பிடித்துக்கொண்டு, 'கோ' வென்று சிறு குழந்தையைப் போல அழுதான்.

"சுமதி!......சுமதி......என்னைப் பார்க்காமல் இருக்கமாட்டாயா?" என்றான் நாத் தழு தழுக்க.

சிறிது நேரம் மௌனம். மறுகணம் அதைப் பிளந்துகொண்டு நீண்ட பெருமூச்சு. அவன் தலை என் மடியில் விழுந்தது. குலுங்கிக் குலுங்கி அழுதான்.

என் கன்னத்தில் உருண்ட கண்ணீர்ப் பொட்டைத் துடைத்து விட்டுக்கொண்டே நான் சொன்னேன்:

"சுமதி, கவலைப்படாதே! உன்னுடைய சுக வாழ்வுக்காக என்னையே நான் தியாகம் செய்து விடுவேன்!" என்றேன்.

"என்ன சொல்கிறீர்கள், அத்தான்? எனக்கு ஒன்றும் புரியவில்லையே!" என்று கூறினாள் அவள்.

"சுமதி! நான் இனிக் குருடன். என்னை மணம் செய்து கொண்டால் வாழ்க்கையில் நீ என்ன சந்தோஷத்தைக் காணப் போகிறாய்? என்னை மணந்தால் மணமற்ற மலர் போலல்லவா ஆகிவிடும், உன் வாழ்க்கை?"

"அதற்கென்ன, அத்தான்! தங்களிடம் எனக்குள்ள அன்பை யாராலும் பிரித்தெடுக்க முடியாது!"

"சுமதி! நான் சொல்வதைக் கேள். நீ எப்படியாவது என்னை மறந்துதான் ஆக வேண்டும். அற்பக் காதலுக்காக உன்னுடைய சந்தோஷ வாழ்க்கைக்கு இடையூறு ஏற்படுத்திக் கொள்ளாதே! நீ என் மேல் கொண்டுள்ள அன்பை இனிச் சகோதரன் மேல் கொண்டுள்ள அன்பாக நினைத்துக்கொள்......!"

இதற்குமேல் அவள் என்னைப் பேச விடவில்லை. "அத்தான்!" என்று உரக்கக் கத்திவிட்டாள்.

மறுகணம் 'டிக்' என்று பயங்கர ஒலி என் காதைத் துளைத்தது. வீணையைத் தடவிப் பார்த்தேன். சுமதியின் தலை வீணையின் தந்திகளுடன் உராய்ந்து கொண்டிருந்தது. அவள் அழுதுகொண்டிருந்தாள்!

அன்று என் அறையில் நான் தனியாக உட்கார்ந்திருந்தேன். சுமதிக்கு விவாக ஏற்பாடுகள் நடந்து கொண்டிருப்பது எனக்குத் தெரியும். என் விரல்கள் வீணையின் தந்தியைச் சோர்வுடன் மீட்டிக் கொண்டிருந்தன. என்னுடைய உள்ளத்





"என்னப்பா! பேப்பரைப் பார்த்தியா? வாடிக்கைக்கிலே கொள்ளை யடிச்சவன் ஒருவனை உன்னை புடிச்சிப் போட்டுட்டாங்களாம்பா! அவன் யாரு தெரியுமாப்பா உனக்கு?"

"அவன் நான்தாம்பா!"

---

தைப் போலவே ஜீவனற்ற நாதம் என் காதில் விழுந்து கொண்டிருந்தது.

யாரோ நீண்ட பெருமூச்சு விட்டது போன்ற சத்தம்; என் கைகளைப் பிடிப்பது போன்ற உணர்ச்சி.

"அத்தான்! என்னை ஆசிர்வாதம் செய்யுங்கள். நான் தங்கள் இஷ்டம்போல் வேறொருவரை மணக்க நிச்சயித்து விட்டேன்!"

"சந்தோஷம், சுமதி! உன் வாழ்வும் சந்தோஷகரமானதாக இருக்கட்டும்! அந்த அமுத கீதம், வீணையின் நாதம் இவைகளை மறந்து விடாதே!" என்றேன்.

அவள் என் இரண்டு கைகளையும் பற்றிக் கண்ணீரினால் நனைத்தாள். அதில் ஒரே வேகம், ஒரே உஷ்ணம்! "என்னை மறந்து விடு!" என்று சொல்லுவது போன்ற ஒரு மூச்சு; துக்ககரமான பெருமூச்சு!

ஒரே நாள் கலியாணம்தான். சுமதி வேறொருவனுக்கு மனைவியாகி விட்டாள்; மறுநாளே அவள் கணவனுடன் போய்விடப் போவதாகப் பேச்சு நடந்தது. நான் குருடன். அவள் என்னை விட்டுப் பிரிவதைக் குறித்து எப்படி வருந்தினாள் என்று என்னால் கூற முடியுமா?

"நான் போய்வருகிறேன், அத்தான்!" என்றாள்.

"கணவனை உனக்குப் பிடித்திருக்கிறதா சுமதி?—நல்ல அழகுதானா?"

"அழகிய மலர்தான். ஆனால்......"

மேலே பேச்சில்லை; சிறிது நேரம் மௌனம். சட்டென்று அவள் அறையை விட்டு வெளியே செல்லும் சத்தம் கேட்டது. ஒருவேளை என்னுடைய பிரிவுக் கண்ணீரைப் பார்க்கச் சகிக்காமல்தான் அவ்வளவு சீக்கிரத்தில் அவள் போய் விட்டாளோ?

சுமதி சென்று விட்டாள்; அவளுடன் அந்த நாதமும் சென்று விட்டது; கீதமும் சென்று விட்டது. இப்பொழுது என் மனம் பாலைவனமாகி விட்டது. ஒவ்வொரு சமயம் வீணையைக் கையில் தொடுவேன். அந்தப் பாட்டின் அடியையே மீட்டுவதற்கு என் கை அங்கலாய்க்கும். மறுகணம் சுமதியின் இனிமையான குரல் எங்கிருந்தோ மிதந்து வரும். அவளுடைய அழகிய வதனம் என் மனக்கண் முன்னால் தோன்றும்.

அவளுடைய சுக துக்கத்தைப் பற்றி அடிக்கடி நான் கேட்டுத் தெரிந்து கொண்டேன். ஒரு நாள் சுமதிக்குக் குழந்தை பிறந்திருக்கிறதென்ற செய்தியை கேட்டு நான் சந்தோஷப் பட்டேன். அவள் தன் குழந்தைக்கு ராதை என்று பெயர் வைத்திருக்கிறாளாம். வீணையின் நாதத்தில் லயித்துப்போன சுமதி, தன் குழந்தையும் குழலிசையில் லயித்துப் போகவேண்டும் என்பதற்காக 'ராதை' என்ற பெயரை வைத்திருக்கிறாளா, என்ன? அவளுடைய முகம் சுமதியின் முகத்தைப்போலவே இருக்குமோ?

இப்படி எனக்கு ஆயிரம் எண்ணங்கள். எப்படியோ இரண்டு வருஷ காலம் கழிந்து விட்டது.

திடீரென்று ஒரு பேரிடி! உடல் நிலை அபாயகரமாய் இருப்பதால் குழந்தையுடன் சுமதி வருவதாகத் தந்தி வந்தது. எனக்கு ஒரே கவலை — வீட்டிலுள்ளோர்களுக்கு ஒரே குழப்பம்.

நான் வெளியே கைத்தடியுடன் நின்று கொண்டிருந்தேன். சுமதி வந்து விட்டாள். மாட்டு வண்டி நின்றதும் மாட்டின் கழுத்தில் கட்டியிருந்த மணியின் ஒலியும் ஓய்ந்தது.

"என்ன, அம்மா! உனக்கு என்ன உடம்புக்கு?" என்று கேட்டாள் தாயார்.

அதற்குப் பதில் சொல்லாமல், "சௌக்கியமா, அத்தான்?" என்று சுமதி என்னை ஈனக்குரலில் விசாரித்தாள்.

இப்பொழுது அவள் குரலில் எவ்வளவு மாறுதல்! இனிமையான சி த் தை த

எழுப்பிய அந்தக் குரலில் ஏன் இவ்வளவு வறட்சி?

"சௌக்கியந்தான்!" என்று பதில் சொல்வதற்குள், அவள் விம்மிக்கொண்டே உள்ளே சென்று விட்டதை அறிந்த நான், தடியை ஊன்றிக்கொண்டே திரும்பினேன்.

சுமதி அன்று படுத்தவள் தான்; மறுபடியும் எழுந்திருக்கவே இல்லை. தீராத நோய் அவளை வாட்டிக் கொண்டிருந்தது. நான் அவள் அருகில் அமர்ந்து ஆறுதல் மொழிகளைக் கூறி வந்தேன். அவள் தன் குறைகளைச் சொல்லி வருந்தப் பட்டுக் கொண்டாள்.

என் வீணையின் நாதம் அவள் காதில் எப்பொழுதும் ரீங்காரம் செய்துகொண்டேயிருக்குமாம். வெண்ணிலவும் குளிர்ந்த தென்றலும் அவள் உள்ளத்தில் இன்ப உணர்ச்சியைக் கிளறிவிடுமாம். சங்கீத ஞானமே இல்லாத கணவருக்கு மனைவியான பிறகு அவள் எண்ணங்கள் ஆயிரம் சுக்கலாய்ச் சிதறி விட்டதாம்.

அவள் சொல்வதைக் கேட்கக் கேட்க என் உள்ளம் உருகியது. நான் மட்டும் குருடனாகாமல் இருந்திருந்தால்......? உம், அதெல்லாம் தெய்வ தண்டனை!

நாளுக்கு நாள் சுமதியின் வியாதி மிகவும் அபாயகாமானதாய்த் திரும்பி விட்டது. மனித முயற்சிகள் பயனற்றுப் போயின. நம்பிக்கையைக் கைவிடும் நிலைமை ஏற்பட்டு விட்டது.

ஏற்கெனவே என் இருதயத்தில் பாய்ந்த அம்பின் காயம் இன்னும் ஆறவில்லை; அதற்குள் மற்றொரு அம்பு பாய்ந்து விட்டால்......?

சுமதி என் கரங்களை வருடி, "அத்தான்! நான் இறக்கப் போகிறேன். என் விதி இப்படி முடிந்து விட்டது. இதோ, ராதையின் கையைப் பிடித்துக் கொள்ளுங்கள். இவளுக்கு வீணை வாசிக்க கற்றுக் கொடுங்கள்; அந்த அமுத கீதத்தையும் அவளுக்குச் சொல்லிக் கொடுங்கள்!" என்றாள்.

பிறகு அவள் பேசவில்லை. 'கோ' என்ற சத்தம். என் கன்னத்தில் கண்ணீர் புரண்டோடியது. என்னைச் சுற்றிலும் ஒரே அழுகைக் குரல்தான்!

இப்பொழுது என்னுடைய சிறிய அறைதான் எனக்கு மாளிகை; ராதையின் குரல்தான் எனக்கு வழிகாட்டி; மனக் கண்முன் தோன்றும் சுமதியின் புன் முறுவல்தான் எனக்கு ஒளி!

ராதையுடன் கொஞ்சுவேன்; குலாவுவேன்; வீணை வாசிப்பேன் — இவைகள் தான் எனக்கு ஆறுதலைக் கொடுத்தன.

"நான் எவ்வளவு அழகாய் இருக்கிறேன் என்று சொல்ல முடியுமா, மாமா?" என்பாள் ராதை.

நான் பதிலுக்குப் புன் முறுவல் புரிவேன். அதில் அடங்கிக் கிடக்கும் அர்த்தம் அந்தக் குழந்தைக்கு என்ன தெரியப் போகிறது?

ராதைக்கும் அந்தப் பாட்டு மிகவும் பிடித்திருந்தது. அடிக்கடி அவள் "மாமா! 'வீணையடி நான் உனக்கு......!' என்ற பாட்டை வாசியேன்!" என்பாள்.

சுமதியின் குரல் போலவே இருக்கும் ராதையின் குரலும். எங்கிருந்தோ இன்பம் என்னைச் சூழ்ந்து கொள்ளும். என்னையும் மீறி அந்த கீதத்தை என் விரல்கள் வீணையில் மீட்டும்.

உலகத்தையே மறந்து விடுவேன் நான். ஆகா! அது என் வாழ்க்கைக்கே ஓர் அமுத கீதமாய்த்தான் இருக்கிறது!

---



"இந்தாப்பா, நான் ஆசிரியரைப் பார்த்துக் கதையைக் கொடுக்கணும். போய் நான் வந்திருப்பதாகத் தெரிவி!"

"கதை யெல்லாம் நேரே கொடுக்கக் கூடாதுங்க; போஸ்டு மூலமாத்தான் அனுப்பணும் என்று பத்திரிகையிலேயே போட்டிருக்கே!"

"நான் யார் தெரியுமா? என் பெயர் பயில்வான் பஞ்சு!"

"அப்படின்னு நிச்சயம் பார்க்க முடியாது. உங்க சாத்திரவத்துக்காகத் தானே இப்படி போட்டிருக்காங்க பத்திரிகையிலே!"




## அப்படியா ?

வீடு பார்க்க வந்தவர் :—பக்கத்து வீட்டில் பாட்டு வாத்தியார் குடியிருக்கிறார் என்கிறீரே. மிகவும் உபத்திரவமாக அல்லவா இருக்கும் !

வீட்டுக்குச் சொந்தக்காரர் : — அதெல்லாம் ஒரு உபத்திரவமும் இருக்காது. அவருக்கு ஏழு குழந்தைகள் இருக்கின்றன. அவைகள் போடும் சத்தத்தில் அவருடைய பாட்டு உங்களுக்குக் கேட்கவே கேட்காது !

★

## சிரமமில்லை !

சிறைச்சாலையைப் பார்வையிட வந்தவர் (ஒரு கைதியைப் பார்த்து) :—ஏன் அப்பா, உன் உறவினர்கள் அடிக்கடி வந்து உன்னைப் பார்த்துவிட்டுப் போகிறார்களா ?

கைதி :—அவுங்க இங்கே வந்து என்னைப் பார்க்க வேண்டிய சிரமமே இல்லேங்களே ! அவுங்க எல்லாரும் இங்கேதானே இருக்காங்க !

★

## அவன் சொன்னது !

பிரயாணி (ஸ்டேஷன் மாஸ்டரைப் பார்த்து) :— அரக்கோணத்துக்குப் போக வண்டி எப்போ வருதுங்க ?

ஸ்டேஷன் மாஸ்டர் :—பத்து அடிக்கப் பத்து நிமிஷத்துக்கு வருது !

பிரயாணி :—பார்த்தீர்களா ! இந்தப் போர்ட்டர் தப்பாகச் சொல்லிவிட்டான் !

ஸ்டேஷன் மாஸ்டர் :—ஏன், அவன் என்ன சொன்னான் ?

பிரயாணி :—ஒம்பது ஐம்பதுக்கு வண்டி வருதுன்னு சொன்னானுங்க !

★

## நல்ல காரியம்

ஒருவர் (தேர்தல் பிரசங்கத்தில்) :— நான் பாட்டாளி மக்களுக்காகப் படாத பாடு பட்டிருக்கிறேன். உண்ண உணவும் உடுக்க உடையும் இன்றித் தவிக்கும் ஏழை மக்களுக்காக எவ்வளவோ உழைத்திருக்கிறேன். தூங்கிக் கிடக்கும் சமுதாயத்தைத் தட்டி யெழுப்பும் பிரசங்கங்கள் எவ்வளவோ செய்திருக்கிறேன். ஆகையால்......

கூட்டத்தில் ஒருவர் :—நீங்கள் இனி நாட்டுக்காகச் செய்யவேண்டியது பாக்கி ஒன்றுமே யில்லை. ஆகையால் உங்களுக்கு எதிராகத் தேர்தலுக்கு நிற்பவரையே தேர்ந்தெடுக்கிறோம் !

## சந்தேகம் வேண்டாம் !

எஜமானி :—ஐயாவின் வேஷ்டியைச் சலவை செய்கிறமாதிரி இந்தப் பட்டுப் புடவையையும் செய்து விடாதே ! பார்த்துச் சுத்தமாய்ச் சலவை செய் !

வண்ணான் :—என்னம்மா இது ! இப்படிச் சொல்றீங்க ! சுத்தமா வெள்ளையாச் செஞ்சு கொண்டாந்து தாரேன் ! அதைப்பத்திச் சந்தேகப் படாதீங்க !

★

## நிபந்தனை

வாங்க வந்தவர் :— வெண்டைக்காய் விலை என்ன விலை ?

கடைக்காரன் :— அவ்வளவும் நல்ல பிஞ்சுக் காய் எடுத்துக்கிட்டுப் போங்க !

வாங்க வந்தவர் :—அது சரி, அப்பா ! விலையைச் சொல்லு !

கடைக்காரன் :—நானுகப் பொறுக்கிப் போட்டால் விசை பன்னிரண்டணு ; நீங்க பொறுக்கி எடுத்தீங்கன்னு ஒரு ரூபாய் !

★

## சபாஷ் !

முதல் மாணவன் :—இன்னிக்கு 'ஹிஸ்டரி' பரீட்சையிலே எனக்குச் சுழிதான்.

இரண்டாவது மாணவன் :—சும்மாப் புளுகாதே. உன் சட்டையில்தான் சில முக்கியமான சரித்திரத் தேதிகளைக் குறித்துக் கொண்டு போயிருந்தாயே !

முதல் மாணவன் :—குறித்துக் கொண்டேன் ! ஆனால் கைப்பிசகாகக் 'கெமிஸ்ட்ரி' சட்டையைப் போட்டுக் கொண்டு போய் விட்டேன் !

★

## ஆச்சரியந்தான் !

மானேஜர் (இரவில் காவல் காப்போனைப் பார்த்து) :—ஏன் அப்பா, வேலுசாமி ! உன்னை நான் இன்று மத்தியானம் வந்து என்னைப் பார்த்துவிட்டுப் போகச் சொன்னேனே, நீ ஏன் வரவில்லை?



வேலுசாமி :— தூங்கிப் போய்விட்டேன். ஸார் ! அதனால்தான் உங்களை வந்து காண முடியல்லீங்க !

மானேஜர் (ஆச்சரியத்துடன்) :— அடே, நீ பகலிலே வேறு தூங்குகிறாயா ?

# 'ஆஸ்ப்ரோ'

## இதோ வந்துவிட்டது!




**போலிகளை வாங்காதீர்கள்.** ஒவ்வொரு வில்லையின்மேலும் 'ஆஸ்ப்ரோ' என்ற வார்த்தை இருப்பதைக் கவனிக்கவும். 'ஆஸ்ப்ரோ' வலியையும் ஜுரத்தையும் 10 நிமிஷங்களில் போக்கும். இருதயத்துக்காவது வயிற்றுக்காவது கெடுதி செய்யாது



'ஆஸ்ப்ரோ' கட்டுப்பாடு செய்யப்பட்ட விலைகள் :

3 வில்லைகள் கொண்ட பாக்கட் . . . 1 அணு
30 வில்லைகள் கொண்ட பாக்கட் . . . 10 அணு

விநியோகிப்பவர்கள் :

ஜே. எல். மாரிசன், ஸன் அண்டு ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட்.
9/10, செகண்ட் லேன் பீச், மதராஸ்
தபால் பெட்டி நெ. 1370, டெலிபோன் நெ. 4460

**'ஆஸ்ப்ரோ' எங்கும் கிடைக்கும்.**

---

குழந்தைகளுக்கு முக்கியமானது

# பேபி கிரைப்

குழந்தைக்கு ஆரோக்கியமளிப்பது





குழந்தைகளுக்கு உண்டாகும் வாயு, வயிற்றுப் பொருமல், வயிற்று வலி அஜீரணம், மாந்தம் பல் முளைக்கும் போது ஏற்படும் வயிற்றுப்போக்கு, முதலிய சகல வியாதிகளையும் போக்கி நல்ல ஆரோக்கியத்தையும் தரும் சிறந்த திராவகம்

தயாரிப்பவர்கள் -

**தி செளத் இந்தியன் மானுபாக்சரிங் கம்பெனி**
**மதுரை**

ஏஜண்டுகள் :—ராஜன் ட்ரக் ஸ்டோர்ஸ், நைனியப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-3; சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ், பெஜவாடா, கிரிஜா மெடிகல் ஸ்டோர்ஸ், பெங்களூர் ஸிடி : எம். பி. எ. ஹமீதா & கோ. 20. டாம் தெரு, கொழும்பு.

SUNSHINE

# Glaxo

ஸன்ஷைன் கிளாக்ஸோ
குழந்தைகளை புஷ்டியாக வளர்க்கிறது

**இந்தியாவில் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :**

**எச். ஜே. பாஸ்டர் & கோ., லிட். பம்பாய், கல்கத்தா, மதராஸ், லாகூர்**

குழந்தைகள் பராமரிப்பைப் பற்றிய சிறிய புத்தகம் 4 அணுவுக்கு ஸ்டாம்புகள் அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். உங்கள் பெயரையும் விலாசத்தையும் எச். ஜே. பாஸ்டர் & கோ. லிட்., த. பெ. 202, பம்பாய் என்ற விலாசத்திற்கு அனுப்புங்கள்.

---

## பருத்தி நூல்களுக்குப் பிரதான ஸ்தாபனம்

# மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்

## மதுரை - தூத்துக்குடி - அம்பாசமுத்திரம்

5,00,000 நூற்கும் கதிர்கள். நம்பர் 80 வரை நூல்கள்.

எங்களுடைய விசேஷமான நூல்கள்: ஒற்றை நூல், இரட்டை நூல், பனியன் நெசவுக்கேற்ற கோன் நூல், மில் நெசவுக்கேற்ற சீஸ் நூல், முறுக்கேற்றிய நூல்.

நாங்கள் சப்ளை செய்வது: கைத்தறி, இயந்திரத் தறி, பின்னல் தறிகளுக்கு வேண்டிய காரிக்கள் நூல்கள், இயந்திர நெசவுக்கேற்ற வார்ப்பு நூல்கள் கலந்த வெப்பிங், கான்வாஸ் முதலியவைகளுக்கு ஏற்ற மடக்கு இரட்டை நூல்கள், மற்றும் பின்னல் இயந்திர நெசவுக்கேற்ற மிருதுவான சன்ன நூல்கள் எங்கள் எகிப்திய பருத்தி நூல்கள் இறக்குமதியாகும் நூல்களைப் போல் எல்லா வகையிலும் கீர்த்தி பெற்றவை. நாங்கள் நூற்பதைத் தவிர நெய்வதில்லை. ஐக்கிய மாகாண சர்க்கார் தங்கள் அறிக்கையில், இந்தியாவிலே நூற்கப்படும் நூல்களில் எங்கள் நூல்கள் மிருதுத் தன்மைக்கும் சன்னத்திற்கும் நேர்த்திக்கும், அழுத்தத்திற்கும் மிகச் சிறந்தவை யென்றும், எல்லா நெசவுத் தொழிலாளர்களும் விரும்புவதாகவும் கூறுகிறார்கள்.

தற்போது நூல் விநியோகம் கட்டுப்பாடு செய்யப்பட்டுள்ளதால், நூல் தேவையானவர்கள் தங்கள் மாகாணம் அல்லது சமஸ்தான டெக்ஸ்டைல் கண்ட்ரோல் அதிகாரிகளுக்கு விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும்.

மானேஜர்கள் : ஏ. & எப். ஹார்வி லிமிடெட்.




கேரளா ஸோப் இன்ஸ்டிட்யூட்

கள்ளிக்கோட்டை

# கூந்தல் வளர்ப்பு

என்பது பண்டைகாலத்தி லிருந்தே நம் நாட்டு ஸ்திரீ களால் கையாளப்பட்டு வரும் ஒரு சிறந்த பழக்கம்.




4-OZ

இதற்கு இன்றியமையாதது

## ஜாப்கோ
## ஹேர் குரோயர்

•

ஜயபாரதம் கோ.,

மல்லேஸ்வரம் - பெங்களூர்

